க

*" Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] க [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 14.] 1905-ம்௵ டிசம்பர்மீ. [சஞ்சிகை 8.

SRI VIDYA OR THE HOLY SCIENCE OF

# "CHARACTER-BUILDING."

## V. "The Ever full Never full Bounty of Love."

IN PRAISE OF WISDOM.

"I loved Her (Wisdom), and sought Her out from my youth, I desired to make Her my spouse. And I was a lover of Her beauty. In that She is conversant with God, She magnifieth Her nobility; Yes, the Lord of all things Himself loved Her, For she is privy to the mysteries of the knowledge of God, And a lover of His work. If riches be a possession to be desired in this life; What is richer than Wisdom that worketh all things? And if prudence work; Who of all that are is more cunning workman than She? And if a man love righteousness Her labours are virtues: For She teacheth temperance and prudence, justice and fortitude: Which are such things, as men can have nothing more profitable in their life. If a man desire much experience, She knoweth things of old, and conjectureth aright what is to come: She knoweth the subtleties of speeches, and can expound dark sentences: She foreseeth signs and wonders, and the events of seasons and times. Therefore I purposed to take Her to me to live with me, Knowing that She will be a counsellor of good things, and a comfort in cares and grief."—*From the Apocrypha.*

"Nature in its ministry to man is not only the material, but is also the process and the result. All the parts incessantly work into each other's hands for the profit of man. The wind sows the seed; the sun evaporates the sea; the wind blows the vapour to the

field; the ice on the other side of the planet condenses rain on this; the rain feeds the plant; the plant feeds the animal; and thus the endless circulation of the divine charity nourish man."—*Essay on Nature* by *Emerson*.

"Knowledge is never of any serious use to man unless it has become part of his customary thinking."—*Dwight*.

"Generous Nature endowed with attributes (*gunas*), causes by manifold means, without benefit to herself, the good of the Spirit, who is devoid of attributes and as such ungrateful."—*Tattva Kaumudi*.

"Now that the Bridal chamber has opened and the Bridegroom has caught the hand of the Bride he has sought so long and through so many ages (and how many millions of births we know not), it is time for friends and lookers on to withdraw. Haste! Haste! the Heavenly hosts in chorus sing! The song reverberates through the whole Universe and changeth itself into "the music of the spheres." The Heavenly Bells peal out their sonorous summons to all Life on earth or heavens to make merry for the impending marriage. All is mirth and song and bliss. Happiness is everywhere! Nature all through has put on her brightest robes and smiles. And the last message the Bridesmaid whispers into the Bride's ear is:—

"WE WERE SEVEN WHO NOW ARE ONE."†

"With the last word yet on her lips the bridesmaid vanishes from view; the Bride and Bridegroom join hands and embracing each other tenderly KISS! The Heavenly Kiss melteth them both into One, and the last expression of their plighted troth and mutual pledge, the *sah* (ஸ:) that is born of their last act of osculation wafts them along,—now united together (*Sômôsmi* ‡ as the *Sruti* says) into that whole indivisible One—and after a spell of the ineffable joy of *Union* (with *Soham* music softly ringing STILL!) lifts them up unto Eternity whereon they live ever more "at Rest," both merged into that BE-ING which is the essence of Love, Light and Bliss. They have become *Akhandakaram*—Indivisibly One! And henceforth we mortals, and the comparatively immortals like the gods too, can only hear of them as "the One," from the Seers who are gifted with the *sight* to see that which is "One only without a second"......Now "this relation between the mind and matter is not fancied by some poet, but stands in the will of God, and so is free to be known by all men. It appears to men or it does not appear. When in fortunate hours we ponder this miracle, the wise man doubts, if, at all other times, he is not blind and deaf.

"Can these things be,
And overcome us like a summer's cloud,
Without our special wonder?"

"For, the universe becomes transparent and the light of higher laws than its own shines through it" says Emerson."—From *Gleanings on the Way*.

"It is the spiritual side of life however, which in India is regarded as of chief importance—in fact as of sole importance........ the end of life sought by them is not enjoyment, material or intellectual, but spritual growth; and one who gains confidential relations with them soon learns that the most cherished hope of every intelligent man is to withdraw during middle age to a mode of life wherein, to repeat an expression which I had frequently heard them use, he "can think only of God."......For in India there is commonly understood by Hindus—not, indeed, by most Europeans—to be a science quite unknown, quite undreamt of, by the "progressive" West, namely the science of *Jnanam* or Spiritual Wisdom; a science which has to do solely with spiritual things, which deals with the principle which

† Nature by herself binds herself by means of seven forms; she causes deliverence for the benefit of the spirit by means of one form"—which one from is Discrimmative Wisdom.

‡ Tattva Kaumudi, Karika 63. Sah+Umah+Asmi=I am He that is ever-at-one-with Umah.

underlies both the visible and the invisible worlds, which is based upon actual and immediate knowledge of the Spirit, of God."—*Mr Phelps in the "Open Court."*

Mr. Harwood to Mr. Burbank, "the Wizard of Flowers and Fruits":—"Has anything developed in your life-work and in your study of the great elemental forces of nature to imperil true faith or render dead a belief in God or the immortality of the soul?"

Mr. Burbank's answer:—"My theory of the laws and underlying principles of plant creation is in many respects diametrically opposed to the theories of materialists. I am a sincere believer in a higher power than that of man. All my investigations have led me away from the idea of a dead material universe, tossed about by various forces, to that of a universe which is all force; life, soul, thought or whatever name we may choose to call it. Every atom, molecule, plant, animal or planet is only an aggregation of organised forces, thus holding them for a time latent, though teeming with inconceivable power. All life in our planet is, so to speak, just on the outer fringe of this infinite ocean of force. The universe is not half-dead but all alive."

"By a necessity engendered and justified by science, I cross the boundary of the experimental evidence, and discern in that matter which we, in our ignorance of latent powers, and notwithstanding our professed reverence for its Creator, have hitherto covered with opprobrium, the promise and potency of all terrestrial life."—*Tyndall.*

"*These two things, the spiritual and the material, though we call them by different names, in their Origin are one and the same*":—LAO-TZU.

## "மதிவளர்வித்தை" அல்லது, ஸ்ரீவித்தை.

### V. "சொல்லென்றுகேட்கவும் சொல்லவுமில்லாப் பூரணத்தேயினிச் சொல்லேதப்பா.!"

### ஸம்பூரணம்.

---

"வந்தேமாதரம்!"—"தாயேவந்தனம்!"

"பூதமுதலாகவே நாதபரியந்தமும் - பொய்யென்றெனைக் காட்டியென்
போதத்தினடுவாகி யடியீறுமில்லாத - போதபூரணவெளிக்குள்
ஏதுமறநில்லென் றுபாயமாவைத்துநினை - வெல்லாஞ்செய்வல்லசித்தா
மின்பவுருவைத்தந்தவன்னையே நின்னையே - யெளியேன் மறந்துய்வனோ!
வேதமுதலானநல் லாகமத்தன்மையை - விளக்குமுட் கண்ணிலார்க்கும்
மிக்கநின்மகிமையைக் கேளாத செவிடர்க்கும் - வீறுவாதம் புகலும்வாய்
வாதநோவாளர்க்கு மெட்டாதமுக்கணுடை - யாமருந்துக்கமிர்தமே
வரைராசனுக்கிருகண் மணியாயுதித்தமலை - வளர்காதலிப்பெணுமையே!"—தாயுமானவர்.

### குருமொழி.

"சாதிபுரியுந் தொழில்களுக்குந் தக்கோர்செய்யுந் தவங்களுக்கும்
நீதிநுலகமேழினுக்குஞ் சேருமிடனுபுள்ளவெனை
ஓதிமுடியுட்பரிசே மெய்யுணர்ந்தார் பிறவாரெனவுரைத்தான்
ஆதிமுடிவொன்றின்றியே யடைந்தோனேயாய்நின்றான்."—பகவத்கீதை.

குருவழி.

"அலையுமனத்தையகத்தடக்கு மவனேசரிதைகடந்தோனும்
அலையுமனத்தையகத்தடக்கு மவனேகிரியைமுடிந்தோனும்
அலையுமனத்தையகத்தடக்கு மவனேயோகதற்பரனும்
அலையுமனத்தையகத்தடக்கு மவனேஞானியதிசூரன்."- -நிஷ்டானுபூதி.

"பேதிக்குமனமென்னும் பெரும்பகையை முழுவலியாற் பிளந்துவென்றேன்
வாதித்ததுயரெல்லா மாற்றினே னுபசாந்த வாழ்வுபெற்றேன்
சாதித்தவிவேகமே யுனைவணங்கினேனென்று சனகர்கோமான்
சேதித்தமனவலை வெல்லாமொழித்துத்தானே சித்திரம்போல்நின்றான்."—
ஞானவாசிஷ்டம்.

மலங்கழி!

"மனமணிபேதச்சேற்றின் மறைந்தொருவருக்குந்தோன்றா
கனமுறவிவேகநீராற் கழுவினற் சித்திகாட்டும்
வினவுறு விவேகவன்பான்மெய்ம்மையைமதியாற்கண்டு
சினமுறு பொறியைவென்று தீர்வரும்பிறவிதீர்வாய்."—ஞானவாசிஷ்டம்.

சாதகன்.

"நிட்டைநிலையீதென்றுரைப்பர் நிகழும்வாயுத்தாரணையை
நிட்டையதுதானலவென்றே நிலவுமேலோர் புகலுவார்
நிட்டையாதல் 'கருத்தடங்க நிறுத்தல்' அதுவே சிவயோகம்
நிட்டைவிடாது சாதிப்போர் நித்தமெய்விடுறுவாரே."—நிஷ்டானுபூதி.

சாத்தியன்.

"காமமாதிகள் வந்தாலுங்கணத்திற்போம் மனத்திற்பற்றார்
தாமரையிலைதண்ணீர்போற் சகத்தோடுங் கூடிவாழ்வார்
பாமரரெனக்காண்பிப்பார் பண்டிதத்திறமைகாட்டார்
ஊமருமாவாருள்ளத்துவகையாஞ் சீவன்முத்தர்."—கைவல்யநவநீதம்.

சகஜன்.

"மன்னியசோரன்றன்னை மனதினினைத்துக்கொண்டு
தன்னுறுகணவனோடு தழுவியவாறுபோலத்
தன்மனஞ்சிவத்தில்வைத்துத் தானவனானஞானி
பின்னையுமுலகினின்று பேசுவான் மாசொன்றில்லன்."—பசுபதிபாசவிளக்கம்.

"மிகவுறுகாமாதிகளாம் விகாரமடைந்தும் விண்போன்மிக நொய்தானோர்
அகமெனலின்றிச் செயல்கள்செய்தாலும் தவிர்ந்தாலு மழுத்தமற்றோர்
சகநெறிகள் செய்திடினு மந்நியர்போற்கண்டு குளிர்தன்மைசான்றோர்
திகழ்மனமுநினைவுமிருந்துஞ்சிறிதுமில்லாதோர்சீவன்முத்தர்."—ஞானவாசிஷ்டம்.

அனுபவி: "பட்டால் தெரியவரும் பாடுபட்டதனால் வாலையாவது காண்."

அலேந்தலேந்து பட்டதெல்லாம் போதும்போதும்
குலேந்துநிலை யந்தோவெந்தாய்! ஒடுங்காநாயேன்
மலேந்தலேந்துயிர் நலிந்தேதா னயர்ந்தேபோனேன்
உலேந்தலர்ந்துன் காலடைந்தேன் களேயுந்தீர்ந்தேன்.

"அகிலாண்டகோடியீன்ற அன்னேயே! பின்னேயுங் கன்னியென மறைபேசுமானந்தரூபமயிலே!" நின்னே யென்னென்று தொழுவேன்! ஏதென்று போற்றுவேன்! "சொல்லென்றுகேட்கவும் சொல்லவுமில்லாப் பூரணத்தேயினிச் சொலலேதப்பா!" வென்று கருணேநிறைந்து * 'வருணே'கடந்த நின்சொல்லின் திறத்தை யென்சொல்வேன்!

"அன்பருக்கன்புதரும்பரஞ்சோதியையாத்துமத்தோ
டென்புருகக் கலந்துள்ளேயுருகி யிரவுபகல்
தம்புருவீணே சரமண்டலத்தொனி தாளதித்தி
மின்பெருகுங் கொலுச்சிங்காரங் கண்டிரு மெய்ம்மகிழ்ந்தே."

என்று அசரீரிவாக்குப் பிறந்ததுபோல் இக் கடவுளந்தாதிப்பா கருத்திலுதிக்கிறது! ஆ! ஹா! அப்படியா! வாக்குமனமுங் கடந்தவிடத்தே † 'நோக்குடனேன்பும்' நழுவியகாலத்து "அன்பருக் கன்புதரும்பரஞ்சோதியையாத்துமத்தோடென்புருகக்கலந்துள்ளே யுரு"காது வேறு என்னதான் செய்யவிருக்கிறது! நின்லீலேயைக்கண்டு அதிசயத்ததைச் சொல்லவென்றால் என் குருநாதன் திருமூலன் சொல்லியபடி "உற்றுநின்றாரொடுமத்தகுசோதியைச், சித்தர்களென்றுந் தெரிந்தறிவாரில்லே." ஆயினும், "பத்திமையாலே பணிந்தடியார் தொழ, முத்திகொடுத்தவர் முன்பு நின்றானே!" யென்பது நின்னருள்பெற்ற அன்பருக் கனுபவசித்தமல்லவோ! பக்திசிரத்தைமட்டு முள்ளபடி யுண்டானால் நின்னருளுக்கு மோர் குறைவுண்டோ! நின்னருள்பெற்றுன் ஸ்வரூபதரிசனமும் கண்டோர்க்குக் குறைவொன்று முண்டோ! நின் தரிசனமகிமையை யான் என்னென்று சொல்வேன்! ஏதென்று புகழ்வேன்!

"அன்னேதனேக்கண்டேன் அருள்பெற்றேன் மயல்தீர்ந்தேன்
அருள்கூடத்தரிசித்தேன் அம்பலத்தாடும் அழகன்திருப்பாதம்
அன்புநிறைந்தென்புருக அவளே யறிந்தேத்தினேன் தொழுதேன்.
அதிசயமா யவள்செய்த அற்புதலீலேகளே யுள்ளுற்றுணர்ந்தேன்;
அற்பனேயானுனு மருள்பெற்ற பாக்கியத்தால்
அலேகடல்தாண்டியே ஆனந்தித்தாடினே னருள்பாடினேன்;
அலேந்தேன் அமர்ந்தேன் அடைந்தேன் குருபாதம்;
அல்லலறுத்தாட்கொண்ட அம்பிகையைப் புல்லிப்புணர்ந்தேன்
புலனற்றுப் பொறியிழந்தேன் பொன்னம்பலத்துட் போனேன் போனேனே!"

—ஆனந்தத்தாய்மொழி.

* வருணே—வருணனே.

† 'கண்ணுங்கருத்தும்.'

அந்தோவெந்தாய்! இவ்வனுபவத்தையென்னென்றெடுத்துரைப்பேன்! "மகளுக்குத்தாய்தன் மணாளனோடாடிய சுகத்தைச்சொல்லென்றாற் சொல்லுமாறெங்ஙனே!" சிற்றின்ப சுகமே சொல்லுக்கெட்டாததென்றால் பேரின்பநுகர்வைப் பிதற்றுவதெங்ஙனே! "புணர்ச்சியுளாயிழைமேலன்புபோல, உணர்ச்சியுளாங்கே யொடுங்கவல்லார்க்குக், குணர்ச்சியில்லாது குலாவியுலாவி, அணைத்தணைத்தின்பமதுவிதுவாமே"—என்று என் நாதன் திருமந்திரோபதேசம் செய்திருக்கிறார். செய்து மென்பயன்? 'உணர்ச்சியுளாங்கே ஒடுங்கவல்லார்க்'கல்லவோ அவ்வுபதேசம் பலிக்கும். மற்றவர்களுக்கென்பயன்? "கழுதைக்குபதேசம் காதிலே செய்தாலும் அவயக்குரலன்றி யங்கொன்றுமில்லை" யென்பது போலப் பக்குவமில்லாத அபக்குவிகளுக்குப் போதிக்கத்தகாததைப் போதித்தால் பாதகமன்றிச் சாதகமொன்றுமில்லை. "சாதகமின்றிச் சாதிப்பாரில்லை"யாயினும், பாதகமின்றியே சாதகம்பயிலவேண்டும். இல்லாவிட்டால் ஆபத்துவிளையும். ஆகையால் தான் இந்த சூக்ஷ்மாதிசூக்ஷ்மமான மனோதத்துவங்களைப் போதிப்பதில் எதையும் குருமுகமாக விருந்தறியவேண்டுமென்று சொல்வது. மேற்றிசையில் மனோதத்துவங்களின் உண்மை சிறிது வெளிப்பட்டு அப்பியசிக்கப்பட்டுவருவதில் இந்தக் கட்டில்லாத தோஷத்தால் எத்தனையோ பாதகங்கள் நேர்ந்து வருகின்றன. மனம்வேறு உடல்வேறு என்ற நினைத்து ஜனங்கள் என்னென்னவோ பேசுகிறார்கள். அது உண்மைக்கொவ்வாமையால் அநர்த்தம் விளைகிறது. "பேய் பிடித்தது, பிசாசு பிடித்தது" என்கிறார்கள். மனப்பேயைவிட வேறு பெரிய பேய் இவ்வுலகில் கிடையாது. இந்தப் பேயை ஆட்டியோட்டியடக்குவதிலும் மேலான வித்தை வேறொன்றுமில்லை. அகம் படிந்தால் மனம் படியும்; மனம் படிந்தால் ஜகம் படியும். ஜகம் படிந்தால் யுகமும் படியும்; யுகம் படிந்தால் (காலதீதனாய்) காலத்தைவென்று ஏகத்தையுமுணரலாம். ஏகத்தையுணர்ந்ததிலிருப்பதே யோகம்; பேதத்தையுணர்ந்ததிற்புகுவதே போகம் ஆகையால் பேயாட்டம் ஆடி நம்மையும் ஆட்டிவைக்கும் மனத்தையடக்கல்வேண்டும். இப்படி "அலையுமனத்தை யகத்தடக்குமவனே" சரிதை, கிரியை, யோகம், ஞானம் எல்லாம் சித்திக்கப்பெற்றவன். மாயோகிகளெல்லாரிலும் சிறந்தவரும் ஆதிகுருவாம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியின் அருள் நிறையப் பெற்றவருமான சனகமகாராஜன் அநுசரித்த வழியுமிதுவே. "பேதிக்குமனமென்னும் பெரும் பகையை முழுவலியாற் பிளந்து வென்றேன், வாதித்த துயரெல்லாமாற்றினேன் உபசாந்த வாழ்வுபெற்றேன்" என்கிறார். இதையெல்லாம் எப்படி சாதித்தார்? என்றால், "விவேகத்தால்" என்று அவரே சொல்கிறார். ஆகையால் நித்தியாநித்தியவஸ்து நிர்ணய விவேகத்தால் மனதின் பேத சுபாவத்தை மாற்றி, பின்னர் எஞ்சி நின்ற வாசனா விசேஷத்தாலுண்டாகும் "மன அலைவெல்லாம்" ஒழிக்கவேண்டும். வாசனாக்ஷயமும் பூர்த்தியாய் ஒழிந்துபோனால் 'சித்திரதீபம்போல' தானே தானாய் அசைவற்று நிற்க நேரிடும். அந்த நிலையில் நின்று நழுவாது அப்பியசித்து வந்தால் இதுகாறும் பேதமாகப்பட்டதெல்லாம், சூத்திரத்திற் கோத்த மணிபோல் ஏகமாக விளங்கும். இந்த ஏகபாவத்தினப்பியாசம் முதிரமுதிர "பேதச் சேற்றில் மறைந்தொருவருக்குந் தோன்றா" "மனமணி"யாம் சுத்தமனதின் ஸ்வரூபம் விளங்கும். அதற்கு அந்த "பேதச்சேறு" போக, "விவேகநீரால்" நன்றாகக் கழுவவேண்டும். அன்பு, விவேகமிரண்டோடுங் கூடிய தீரவிசார விசேஷத்தால் கூர்மையெய்திய மதியைக் கொண்டு உண்மையாம் ஸத்யத்தைக்கண்டு "சினமுறு பொறியைவென்று" தீர்ப்பதற்கரிதா

கிய பிறவிநோயைத் தீர்க்கவேண்டும், தத்துவவிசாரஞ்செய்து மனதைவெல்ல நிஷ்டையை
முக்கிய சாதனமாகக்கூறுவர். அந்த 'நிஷ்டை நிலை'தான் என்னவெனில், உண்மையுணராது
யோகநெறிபற்றி யுழலுவார் மூச்சையடக்கி 'வாயுபந்தனம்' செய்வதே நிஷ்டையென்பார்.
உண்மையுணர்ந்த மேலோர் அது நிஷ்டையல்லவென்று தள்ளி மனதைக் "கருத்தடங்க
நிறுத்தல்" தான் நிஷ்டையென்றும், "அதுவே சிவயோகம்" என்றும், இடையறாது இந்த
உண்மைநிஷ்டை சாதிப்போர் நித்த முத்த புத்த சுத்த சுகவாழ்வெய்துவரென்றும் கூறுவர்.
இப்படி நிஷ்டைசாதித்து அதாவது 'கருத்தடங்க' மனதை நிறுத்தித் தன்னையன்றித் தன்மன
மசையாமலும், பிராரப்தவசத்தால் அது அசையநேரிட்டாலும் தான் அசையாமல் நிச்சல
மாக நித்தியசாக்ஷியாகமட்டுமிருக்கவும் பழகிப்பழகி எவரெவர் அப்பியாசயோகசித்தி பெற்
றார்களோ அவர்களே சீவன்முத்தர் ஆவார்கள். அந்த சீவன்முத்தர்கள் எப்படியிருப்
பார்களென்றால், "காமமாதிகள் வந்தாலும் கணத்திற்போம் மனத்திற் பற்றார், தாமரையிலை
தண்ணீர்போல் சகத்தோடுங்கூடிவாழ்வார்;" பக்குவாபக்குவ மறிந்தொழுக வல்லவராதலின்,
அபக்குவிகளிடத்தில் சொல்லத்தகாததைச் சொல்லமாட்டார். அவர்களுக்கு அவர் "பாமர
ரெனக் காண்பிப்பார், பண்டிதத்திறமை காட்டார்"—"வாயாலொன்றுமாவதில்லை" யென்ப
தின் உள்மர்மத்தையுணர்ந்து ஸங்கல்பசக்தி விசேஷத்தைத் தீர்க்கமாகவறிந்தவராதலால் தவ
ளைபோல் கத்தி வாயைச்செலவழிக்காது "ஊமருமாவார்." ஆனாலுள்ளத்தில்மட்டும் இடை
விடாது ஆனந்தம் பொங்கிக்கொண்டேயிருக்கும். சோரபுருஷனிடத்திலிச்சைவைத்த
பெண், அவனை நினைத்துக்கொண்டு லோகாபவாதத்துக்குக் கட்டுப்பட்டுத் தன் சொந்தப்புரு
ஷனையணைவதுபோல, அவர்களும் "தன்மனம் சிவத்தில்வைத்துத் தானவனாகியுள்ள" ஆத்
மானந்தத்தை விஷயானந்தத்திலேற்றி உலக வியவகாரஞ்செய்வார். துன்பம் வந்துழி ஆத்
மானந்தத்தில் மூழ்கியும், இன்பம் வந்துழி அதை ஆத்மானந்தத்திலும் வேறாகவின்றிப் பூர
ணானந்த அனுபவத்திலிருந்து அதை அனுபவித்தும், இப்படி சுகதுக்கங்களை நுகர்வதுபோல்
காட்டி உண்மையில் இரண்டினாலும் பாதிக்கப்படாமல் இவ்விரண்டுக்கும் மேலான ஆனந்
தாதீத நிலையிலிருந்து நித்தியசுகமனுபவித்து வருவார். இவர்கள் அகப்பற்று நீங்கினவர்க
ளாதலால், முன் செய்த சங்கற்ப விசேஷத்தால் வரும் பிராரப்தகருமங்களைச் செய்ய நேரிட்
டாலும், செயலற்றிருக்க நேரிட்டாலும், செய்கை செய்யாமையிரண்டிற்கும் தான் சாக்ஷி
மாத்திரமாக விருந்துகொண்டு, கர்த்தா போக்தாவென்கிற எண்ணம் சிறிதுமின்றி ஞானப்
பிரகாசத்தினால் விளங்கும் "மனமும் நினைவுமிருந்தும்" உலகப்பற்று தேகப்பற்று சிறிது
மின்மையால் அதனாலுண்டாகும் பந்தமில்லாததுபற்றி அவை "சிறிதுமில்லாதோர்" எனவே
சொல்லத்தக்கதாக விளங்குவார்.—இப்படிப் பற்றுமுழுதுமற நீங்கியவரே "வைதேகர்"—
"விதேகமுக்தர்" என்றும் சொல்லப்படுவார். இதற்கு உதாரணம் சனகர், சுகர் முதலானோ
ராம். நிலைக்கடங்காத இவ்வுந்நதநிலை பெறுவது மிகவும் கஷ்டமாம். பெற்றுவிட்டாலோ
அதிலும் பெரிதாகப்பெறற் குரியபேறு வேறொன்றில்லை. "பெறற்கரியபெரும் பேரின்பம்"
என்பது இதுவே. நிச்சலனமாய் நிம்மதியாய் அசைவற்றிருக்குமானந்தத்தை யனுபவித்
துப் பழகினவர்களுக்கே இது கிரமக்கிரமமாக சித்திக்கும் இந்நிலை சித்திக்கும்போது அவர்
கள் தேகக்கூறுபாடுகளின் அமைப்பு முற்றும் மாறிப்போம். இப்படி சித்திபெற்றவர்களு
டைய தேகம் கடுகைத்துளைத்துக் கடலையடைத்ததுபோலும் அண்டாண்டங்களையும் விழுங்

கிய பிண்டமாம். இந்த தேகத்தின் மகிமையைச் சொல்லமுடியாது.—இத்தேகம் அவர்களுக்கு (Laboratories & Observatories) ரஸபரீக்ஷை, வான்பரீக்ஷை செய்வதற்குரியதோர் பொக்கிஷசாலைபோலுமாம். இந்தவுடலைக்கொண்டு அவர்கள் எல்லாவித்தைகளும் செய்வார்கள். ஸர்வஸித்திகளும் பெற்று விளையாடுவார்கள். இவ்வுடலை யுள்ளபடியறிந்துணரும் உடலறிவிளக்கமே எல்லா வித்தைகளுக்கும் மூலவித்தையாம். அண்டத்திலுள்ளது பிண்டத்திலுமாதலால், அவர்களுக்கெட்டாத இரகஸியமில்லை. அவர்கள் கண்ணுக்குத்தட்டாத விதியில்லை.

"இமையாத நாட்டத் திருந்துணர் வாருக்
கமையாத வானந்த மாம்."—ஔவைகுறள்.

என்றிருப்பதால் அவர்கள் சதாநிஷ்டைபுரிந்து பெற்ற "அமையாத வானந்த"த்தில் எல்லாவற்றையும் சாதித்துக்கொள்வார்கள். அவர்கள் † தேகமோவெனில்,—

"சுந்தரச் சோதி துலங்கு மிடமது
மந்தரச் சக்கரமு மாம்."—ஔவைகுறள்.

அனுபவமுதிருங்காலத்தில் தேகத்தில் அனேகமாறுதல்கள் தோன்றும். அப்பியாசயோக உபாஸனகாலத்தில் தியானுக்கினியால் உடலெல்லாம் வெந்துபோம். நீர்த்துவாரம் புண்ணும். தேகம் கட்டுவிட்டுக்கலைந்து விழுந்துபோம்போலிருந்து பிந்திச்சேர்ந்து இசையும். பிடிவாதமாயிருந்து தியானசமாதியில் நிஷ்டைசாதிக்க முயலுகையில் தேகத்திலனேகஉற்பாதங்கள் தோன்றும். மனதை யழித்தழித்துப் புதிப்பித்துக்கொண்டு போவதால், அந்தச்செய்கையின் பலன் மனதின் காரியமாகிய தேகத்திலும்காணும். அப்பொழுதுண்டாகும் தேகோபாதியை யனுபவித்த சித்தர் ஒருவர் சொல்லக் கேளுங்கள். திருவள்ளுவர் கூறுகிறார்:—

1. "காலசருங்கையெரியுங்கண்வாய்கூசும்கண்டமதுபச்சைப்புண்ணதிதங்காணும், ஆலவிடந் தீண்டினதுபோலாந் தேகம், அசதிமெத்த தீபனமுமதிதங்காணும்—வாலையொரு திங்களு மூன்றுச்சுதானல், மயக்கமெனும் பேதியதாம் மனம்தாளாது—கோலமெனுமனமதுவே தேறவேணும், கொடிதாகக் கொண்டமிர்து கொள்ளலாமே."

2. "உள்ளிருந்த நோய்களெல்லாம் வெளியேகாணும், உடம்பெல்லாம் புண்ணுக வெந்துநீறும், எள்ளிலைபோல் மேனியெல்லாந் தழுக்குக்காணும்—இந்திரியமுடைந்தல்லோ தண்ணீராகும், கொள்ளியால்சுட்டபுண்போல் நாபிவேகுங்—குமட்டுமாமவிழ்ததத்தைக் கொள்ளொட்டாது—துள்ளிவிழுந்தலறுமதா யெரியுந்தேகம்—சுருக்கெனவும் நீர்கடுப்புந் தோன்றுந்தானே."

3. "ஒட்டொட்டாய் மேனியெல்லாங் கடுப்புத்தோன்றும்—ஊனத்துநீர்தாரை யுடனே புண்ணுங்—கட்டிவைத்த பழங்கனிபோல் தேகங்காந்துங்—கலகலென்று நரம்

† வேமன்னயோகீசுவரர் சொல்கிறார்:—"சடம் சடமென்று அதின்மேலாசைவைத்து இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருக்கும் ஜனங்களே இந்தச் சடமானது நிலையல்லாததென்று நினைக்கப் போகாதோ! என்றுமழியாத பரமாத்துமாவின் காயமானது காணப்படாமல் மோக்ஷங்கிடைக்குமா?"

பெல்லாந் தளர்ந்துகாணும்—முட்டியல்லோ வாய்வுஅங்கே யேறிமீளும்—முறைமையைந்து திங்களுக்குள் ஒருமையாகும் - ஒட்டியம்போல் மடமயிலாள் தன்னைநம்பி ஓங்காரபீடமதிலூன்றிடாயே."

இன்னும் இந்த வுடலுக்குள் "தொண்ணூற்றறுவருமே" சென்று யுத்தஞ்செய்வதை மேன்மேலும் வருணித்துச்சொல்லி அக்காலத்தில் "மீளாச்சித்திரவதை யிதை நீ யறிந்து—பண்டுபழகினதால் பின்பு பாவையருடனே சேராதே" யென்று எச்சரித்துப் பின்னும் சொல்கிறார் :—

"கோராதுடல்கூசுந் தொண்ணூற்றாறு கருவியுஞ்சோபதாம் வேறாய் வெவ்வேறுபடுத்தி மாதுமேவதனை பொதுவுடல்வேசாறும்—வீறுடன் பசிகோபங்கனல்வேகமெத்தகாணும் பூரணத்தில் கூறுடனறிந்து * கற்பமதிகொண்டாலல்லோ தேகக்கூறு ‡ காணும்"...என்று இப்படி மாகாமாதம்படுந் துன்பங்களைச் சொல்லிக்கொண்டுபோய் "பட்டால் தெரியவரும் பாடுபட்டசுறைல் வாலையாவதுகாண்" என்று கூறிப்பின்னர்:—"பத்தாந்தான் திங்களிலும் துயர்பாலன் படும்பாடு-மெத்தவுண்டு; கற்றோர் கல்வியார் காணுங் காயசித்திபெற்றால் காலனில்லை" என்கிறார். இந்தச் சங்கடங்களுக்கெல்லாம் "உற்றார் உறவின்முறை, சுற்றத்தார்க ளொருதுணை யானதறியேன்—இதுக்கு மருந்துதவும்புவியில்எங்குமில்லை"—ஆனால் 'அமிர்தவருஷணி' யென்னும் 'கதிர்மதியால்', "ஜடமெண்சாணுடலும் வலுத்திடுங்காண்"—என்கிறார்.

"காயம்வலுத்ததுகாணுண்டே-காயம்வலுத்ததுகாண்."

1. "காயம்வலுத்தது மாய்கைமறந்தது, கவலைதெளிந்தது சகலமொழிந்தது, நேயனருள் பணிந்தாக்கை வலுத்தது, நீயென்று நானேன்று நேசமொழிந்தது. (காயம்வலுத்ததுகாண்.)

2. கூற்றுவனென்ற கொடூரமழிந்தது, கோடானுகோடி வியாதியிறந்தது, ஏற்றியிருந்த இகழ்ச்சிமறந்தது, என்னுள்ளே யீஸ்வரன் தன்னையறிந்தது. (காயம்வலுத்ததுகாண்.)

3. வாசமாய் நித்திரைபாசமறந்தது, வையகத்தோர்கள் வசியம்பிறந்தது, தூஷணையற்றது பூசைநைவேத்தியஞ், சொல்லும் மந்திரசெபஞ் சொக்கியும்போச்சுது.(காயம்வலுத்தது)

4. தத்துவந்தொண்ணூற்றாறும் பிரிந்தது, தாதுகள் நாடி சடமும்வேறாச்சுது, சுத்தசலமென்றமூரிதேனாச்சுது, சுகஞானதீப சுழிகாணலாச்சுது. (காயம்வலுத்ததுகாண்)

5. காமப்பாலுண்ட கருத்துமழிந்தது, காமக்குரோதலோபங் கண்டிதமாச்சுது, வாமப்பால்கொண்டு மதியொளிகண்டு, மகிழ்ச்சியடைந்து வச்சிரதேகமாச்சுது. (காயம்வலுத்தது)

6. மூலத்தினுள்ள முப்பாழுமழிந்தது, முன்னமே யன்னமயமும் பிரிந்தது, ஞாலத்திலேறவும் வாசிவளரவும், ஞானசிரோமயகியானவானுண்டையே. (காயம்வலுத்ததுகான்)

7. ஓராண்டுக்குள்ளே யுடல்வெவ்வேறாச்சுது, ஓங்காரத்துள்ளே யுயிருறவாச்சுது, நீங்காதவாசி நிராமயமாச்சுது, நின்னுள்ளம் நின்மயநேசமதாச்சுது. (காயம்வலுத்ததுகாண்)"

* * * *

இரசாயனசம்பந்தமான மாறுபாடுகளைக் குறித்து இது சொல்கிறார் :—

10. "நித்தம்வாசியூதி நின்றருசாதியும்†மற்றதுகைப்பு அப்புவும் சுன்னமாம் பெற்றபேரிப்படி, பேர்பெறுஞானிகள் உத்தமர் சொல்லுமுண்மையதாண்டையே. (காயம்வலுத்தது)"

இந்தநிலையில் பிராணனை லக்கச்செய்துகொண்டு அருள்வழிப்பட்டு நின்றால் வரும்பலனைச் சொல்கிறார் :—

* 'கற்பமதி'—அமிர்தவருஷணி. ‡ உடற்கூறு - தேகதத்துவங்கள் 96-ம் தெரிய விளங்கும்.

† உருசிமுதலானதும்.

11. "வாசிநிலையாதேல் மாண்டிடுந்தேகமும், பாசம்வைத்து விசுவாசித்து ஊதிடும், பேசப்பேசவெகு கோடிரகசியம், ஈசனருள்படி யனுக்ரக நிலையினில். (காயம்வலுத்தது)" இதையெல்லாம் இக்காலத்து நவீன நாகரீகர்களைப்போல் அக்காலத்துள்ள 'நாகரிகர்களும்' பொய்யென்று தள்ளப்போகிறார்களென்று பின்வருகிறபடி உறுதிகூறி உண்மையை வற்புறுத்துகிறார்:—

13. "சந்தேகங்கள் வாரா சாக்ஷிநாலைப்பாரும், வந்தவழிவரும் மாறலகப்படும், எந்தன் கருத்தந்தவிதிப்பயன், நிந்தனையுமில்லாநீடூழிவாழ்வார்களே. (காயம்வலுதத்துகாண்)"

இதன்பாஷை கொச்சையாகவிருக்கலாம், இலக்கணம் தப்பாகவிருக்கலாம். ஆதிநூலைப் பிழையறத்திருத்தி யச்சிடுவாரில்லாமையால் பிழைகள் மலிந்துகிடக்கலாம். ஆனால் ஒன்றுமட்டும் இதில் நிச்சயமாகப்படுகிறது: நமது முன்னோர்கள் ஆத்மஞானத்தைத்தேடியதில் ஏட்டுச்சுரைக்காய் சமாசாரமாக வீண்மனோராச்சியஞ் செய்துகொண்டிருந்தார்களென்று சொல்வதற்கில்லை. இப்பாட்டுகளில் கண்டுள்ள தேகமனோதத்துவங்களையும் ரஸாயன உண்மைகளையும் உடலுயிருறவையும், அவை பிரிந்து கூடும் மர்மத்தையும் உணர இக்காலத்து மேற்றிசையார் சாஸ்திரஞானமெல்லாம் அஸ்திபாரமாகவிருக்க அமைத்துக்கொண்டு அவற்றிற்கும் மேல் தன்னுயிரையும் உடலையுங்கொண்டு பரீக்ஷைசெய்து பார்க்கும் தீரமும், தீர்க்க புத்தியும், தீர்க்கதரிசனமும் வேண்டுமென்பது திண்ணம். இந்தவழியனுசரித்த ஒருவர் தான்கண்ட அனுபவத்தைப் பின்னால் வருகிறபடி இவர்களது பரிபாஷையையனுசரித்துச் சொல்கிறார். அதில் ரசாயனமர்மம் எவ்வளவோ அடங்கியிருக்கிறது:—

"வார்த்தைக்குள் வார்த்தை." *

(1) "உப்போடுறைப்பெல்லாமுங் கைத்துப்போச்சு
கைப்புமேதானென்தாயே திதிப்பதாச்சு
திதிப்புமேகேளென்கண்ணே புளிக்கலாச்சு
புளிப்புமேதான் துவர்த்துப்போன லதுவேயதுவாம்
அத்துவிதமாமதுவை யுண்டுபாரே!"

இதனுண்மை யின்னதென்றுணரவேண்டி "ஈசனருள்படி யனுக்ரகநிலையினில்" "பேசப்பேசவெகு கோடிரகஸியம்" வெளிப்படுமென்பதுண்மையாதலால், மூன்றுநாள் 'அருள்கூடிவர' அருந்தவம்புரிந்து உபாஸனாமுறையில் அப்பிசைனை வினவ, அவளதருள் வெளியிற்கிடைத்த தார் பதிலையும் கீழேவரைகிறோம்:—

"வாக்குப்ரதிவாக்கு."

(2) உண்டுபாரிரண்டைவிட்டு ஒன்றேபற்றி
விண்டுபாராலமுண்டான் கண்டக்கறுப்பை
நண்டுபாரதீன்றகுஞ்சால் மாண்டேபோச்சு
உண்டுபார்த்தவன்னுடம்பும் கறுப்பேபாச்சு!
கண்டுகொள் நீ காரணத்தைக் கனகவித்தை மர்மத்தாலே.

(3) செம்பிற்களிம்புபோல செங்குறுதிதன்னில்தாயே
அம்பரத்தாடுமீசன் அருளென்னுங்களிம்பொன்றுண்டு
அம்பரத்தாடுமீச னருளில்சானு முதிர்ந்து திர்ந்தால்
செம்பரத்தை யுள்விளக்கு மும்பரப்பளிங்கேபோல
இம்பரத்தாடுமாக்க ளுதிரத்தீயும் புகைந்தே களிம்பாம்.

* வேமன்னயோகீசுவரர் சொல்கிறார்:—வார்த்தைக்குள் வார்த்தையும், அவ்வார்த்தைக்குள் வெளியுமிருக்கிறது. "அந்த வாக்கினிடமிருக்கு மர்மத்தையறியுமவனே பாப்ரம்மமாகும்."
உலகத்தார் "வாக்கினாலே கர்மம் வந்தணுகுவதை யறியாமலும் அந்த வாக்கினாலே உலகத்தாசையிலகப்பட்டும் பட்டிமாட்டைப்போல் திரிகிறார்கள்."

(4) உதிரத்தி களிம்புவிட்டால் உணர்வு கசப்பாம்
உதிரத்தி னுள்லோகங்கள் கழன்றே வீழும்
பதருது சிதருது பகிர்முகம்விட் டுள்ளேநிற்கில்
உதிரத்தி னுள்வேகம் சீதிப்பின்னர் தானேதணியும்
உண்மையாக் கைப்பதெல்லாம் திதிப்பே யாகும்.

(5) கைப்புமேதான் திதிப்பாகும் மர்மங் கேளாய்
களிம்பேற வுதிரத்தில் கைப்பு மாயும்
கைப்பாலே கைப்பென்னு மாய்ப்புப் போனல்
கைப்பெல்லாம் மாய்ப்பில்லா மதுர மாகும்
களிம்பினு லாகும்சித்தி கனகவித்தை தன்னிற்பாரே.

(6) கைப்புமேதான் திதிப்பாகும் மர்மஞ்சொன்னேன்
* மெய்ப்புலவர் மர்மத்தை மறைத்து முணர்வார்
† கைப்பழக்க மில்லாதார் கண்டு முணரார்
‡ மனப்பழக்க மெத்தவுள்ளார் மகிழ்ந்தே யறிவார்
மதுரமுந்தான் புளிப்பான மர்மத்தைக் கேள்!

(7) உப்போடுறைப்பெல்லாமுங்காரசாரம் சேர்ந்தேயுளது
காரமுந்தான் சுன்னமப்பா சாரமுந்தான் புளியேயாகும்
உதிரத்தீ மூண்டெரிந்தால் காரமெல்லாம் சுன்னமாகும்
மதுரமா முப்பிலுள்ள காரம்போனல் சாரம்மிஞ்சும்
மிஞ்சின சாரமது காலஞ்சென்றால் காடியாகும்.

(8) காடிப்புளிப்பிலேதான் காரமில்லை சாரமில்லை
நாடிப்பார் நாவுக்கது துவர்த்து நிற்கும்
காரசாரமற்றுமது கானல்நீர்போல் கதித்தே நிற்கும்
உண்மையாயுண்டவர்க்கது உவப்பைக்கொடுக்கும்
உள்மலமூன்றையுமது தகித்தேபோடும்.

"இலக்கியங்கண்டதற்கிலக்கணம்."

உடலோடுயிர்வந்தொன்றுவதியல்பே ... ... (சகலம்)
உயிரோடுடல்சென்றொன்றுவதிருளே ... ... (கேவலம்)
இருளோடுயிருடலற்றுத்தானுயொளிர்வது அருளே ... (சுத்தம்)
அருளேதெருளும் தெருளேயருளுமாய் ... ... (அதிதம்)
மருளேயுண்டுமேலைப் பாம்பதுபோல்வதுபொருளே ... (நிஜம்—ஸத்யம்)

"திருப்புகழ்."

"ஐந்துபூதமுமாறுசமயமு மந்த்ரவேதபுராணங்களு மைம்பதோர்விதமானலிபிகளும் - வெகுரூப
மண்டராதிசராசரமுமுயர் புண்டரீகனு மேகநிறவனும் அந்திபோலுருவானும் நிலவொடு - வெயில்காயுஞ்
சந்த்ரசூரியர்தாமும்அசபையும் விந்துநாதமும் ஏதுவடிவுமொர் தன்சொரூபமதாகநிகழ்வது - சிவயோகம்
தங்களாணவமாயைகரும மலங்கள்போயுபதேசபரகுரு சம்ப்ரதாயமொடேயுநெறியது - பெறவேனே."—அருணகிரிநாதர்.

ஓம்தத்ஸத்.

* 'மெய்ப்புலவர்'—உண்மையனுபவமுதித்த ஞானிகள். † 'கைப்பழக்கம்'—பிராணயோகாப்பியாசம். ‡ 'மனப்பழக்கம்'—மனதை நிறுத்திப்பார்க்கும் நிஷ்டை சாதனை.

## "HANGED BY CONVICTION."

*(From the French of Eugene Chavette.)*

## "கோபுரத்தின் மேலேறிய குரங்கு"

அல்லது

## "மனதார மரணதண்டனைக் குடன்பட்டவன்."

(202–வது பக்கத் தொடர்ச்சி.)

" கடலிலேதிரியுமாமை கரையிலேறி முட்டையிட்டுக்
கடலிலேதிரிந்தபோது ரூபமான வாறுபோல்
† மடலுளேயிருக்குமெங்கள் மணியரங்கச் சோதியை
* உடலுளேநினைந்து நல்லவுண்மையான வுண்மையே."

ராஜா தனக்குத்தானே யிப்படி பேசிக் கொண்டான் :—

" இப்பொழுது நமக்கு நல்ல அழகும்பிரியமுமுள்ளவளாய் ஒரு மனைவியும் நல்ல சற்புத்திரர்களும், அரண்மனைகளும் உத்தியானங்களும் இஷ்டப்படி செலவழிக்க கோடிக் கணக்காய் திரவியமும், நோயற்றவாழ்வும், ஸங்கீத ஸாஹித்யகலாக்ஞானமும், உலகெங்கும் பிரசித்திபெற்ற கீர்த்தியும் கையில் லக்ஷ்மியும் வாக்கில் ஸரஸ்வதியுமாக கல்யாண புருஷனாய் விளங்கும் பாக்கிய முண்டானால், அப்பொழுது இப்படி தூக்குமரத்தைப்பற்றி யோசிக்க புத்தி செல்லுமா? அப்பொழுகாவது நம்மனது திருப்தியடையுமா, அடையாதா?—ஆம், தற்காலத்துக்கு அடையலாம். ஆனால் என்றைக்கிருந்தாலும் ஒருநாள் இவைகளில் அதிருப்தி உண்டாவது நிச்சயம். அப்படி உண்டாகாவிட்டால், இவைகளில் எவ்வளவுக்கெவ்வளவு திருப்தி அடைகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு சாகும்காலத்தில் இவைகளைவிட்டுப் பிரிவதில் துக்கம். ஆதலால் எவ்வளவு சீக்கிரமாய் இவைகளை வெறுக்கிறோமோ அவ்வளவுக்கும் நல்லது. என்றைக்கிருந்தாலும் விட்டுவிட்டுப் போகவேண்டிய வஸ்துக்களை முன்னே விட்டாலென்ன, பின்னே விட்டாலென்ன.? பட்டணத்துப்பிள்ளைக்கு நாம் ஆசைப்பட்ட பாக்கியத்தைக் காட்டிலும் அதிகமாகவேயிருந்தது. அவரே அவைகளில் ஸாரமில்லை என்று விட்டுவிட்டார். ஆனால் உண்மையான வைராக்கியத்துக்கும் அபாவ வைராக்கியத்துக்கும் வித்தியாசமென்ன? பொதுவில் எல்லாருக்கும் தேடியபொருள் கிட்டாவிட்டாலும் அல்லது உள்ளபொருளை இழந்தாலும் உடனே வைராக்கியமுண்டாவது சகஜம். ஆனால் அப்பொருள்களின் தத்துவத்தை உண்மையாய் உள்ளபடி ஆராய்ந்து வெறுத்தவன், அவைகள் திரும்பி வலுவில் தன் கைக்குக் கிட்டியபோதிலும் அவைகளில் பற்று வைக்கமாட்டான். அபாவ வைராக்கியக்காரனோ அவை அகப்பட்டால் ஒரு கை பார்ப்போமென்று தன் பழைய வைராக்கியத்தை மறந்துவிடுவான். இதுதான் வித்தியாசம். ஆனால் நம்வைராக்கியம் எதில் சேர்ந்ததென்று யோசித்துப் பார்ப்போம். ஒவ்வொருவஸ்துவையும் உள்ளது உள்ளபடி ஆணிவேர்மட்டும் ஆராயவேண்டும்.

" முதலில் நம்மனைவி அழகுள்ளவளாயிருக்கவேண்டுமென்னோம். ஆனால இந்த அழகென்பதென்னவென்று விசாரிக்கப் புகுந்தால் ஒன்றும் ஏற்படவில்லை. இந்த அழகு தோலிலிருக்கிறதா, கண்ணிலிருக்கிறதா, மூக்கிலிருக்கிறதா, மயிரிலிருக்கிறதா? இவைகளொன்றிலுமில்லை. இவைகளிலுண்டானால் செத்தபிணமும் அழகாகவே யிருக்கவேண்டும். செத்து ஒருமணிக்கெல்லாம் விகார

† (பூவில் மணம்போலும்.)
* 'உண்மையான நல்ல உடலுளே நினைந்து (பார்! நீ) உண்மையே (ஆகுவாய்)'

முண்டாகி விடுகிறது. சாகிறதற்குமுன்னமேயே சிலருக்கு இரண்டுபிள்ளை பிறந்துவிட்டால் எல்லா அழகும் போய்விடுகிறது. மேலும் சிலருக்கு கண் மூக்கெல்லாம் சிற்ப சாஸ்திரப்படி தவறில்லாமல் அமைக்கப்பட்டிருந்தும் முகத்தில் "களை" என்பதில்லை. பின்னும் ஒருவருக்கு அழகாகத் தோற்றுகிற உருவம் இன்னொருவருக்கு அழகாகிறதில்லை. "காக்கைக்குத் தன் குஞ்சு பொன்குஞ்சு" என்கிறபடி அவனவன் பெண்சாதி அவனவனுக்கு அழகாகவே யிருக்கிறாள். ஆகையால் இந்த தேகத்துக்கு ஸ்வபாவத்தில் அழகென்பது கிடையாது. சந்திரன் சூரியனுடைய வெளிச்சத்தைக்கொண்டு பிரகாசிப்பதுபோலும், காற்று புஷ்பங்களின் வாசனையைக் கொண்டு பரிமளிப்பது போலும், இந்த தேகம் அகத்தினழகைக்கொண்டு விளங்குகிறது. இன்னும் ஆராய்ந்துபார்த்தால் இந்த அழகென்பது நம்மனசிலேயே இருக்கிறதேயொழிய பார்க்கப்படுகிற வஸ்துக்களிலில்லை. இப்படி அகத்திலிருக்கப்பட்ட அழகை நாம் அறியாமையினால் புறவஸ்துக்களில் தேடிப் போகிறோம். அப் புறவஸ்துக்கள் சிற்சில சமயங்களில் அவ்வழகை வெளியே இழுக்கின்றன. அப்பொழுது எலும்பைக் கடித்த நாய் தன் பல்லிலிருந்து வருமிரத்தத்தை எலும்பிலிருந்துண்டான இரத்தமென்றெண்ணி மயங்குமதுபோல், நாமும் மயங்குகிறோம்.—அப் புறவஸ்துக்கள் என்றைக்காவது நாம் தேடிய அழகை வெளியே இழுக்கத்தவறினால் அன்றைக்கு துக்கம். ஆதலால் இந்த அழகின் உண்மையான இருப்பிடத்தைக் கண்டுபிடித்துவிட்டால், புறவஸ்துக்களைத் தேடி துக்கப்படவேண்டியதில்லை.

"இரண்டாவது, ஐசுவரியத்தின் மர்மத்தை விசாரிப்போம். வீடும் நிலமும் பணமும் அவையவை இருக்கிற இடத்திலேயேதான் இருக்கின்றன. 'நமது' என்பதற்கடையாளமாக நம் தேகத்தில் வந்து ஒட்டிக்கொள்ளுகிறதில்லை. நமக்காக ஒரு அடி கூட நகர்ந்து கூட வருகிறதில்லை. பொழுது விடிந்து பொழுது போனால் நம் பொருளைப் பிறர் அபகரிக்காமலிருக்கவேண்டுமே என்கிற பயம். கடன் கொடுத்தால் திருப்பி வரவேணுமே என்கிற கவலை. கொடுக்காவிட்டால் மனஸ்தாபம். கொடுத்தபின் வியாஜ்யம். இவ்வளவு துக்கங்கள் ஐசுவரியத்திலிருக்கின்றன. மேலும் ஒவ்வொரு வஸ்துவும் அதன் ரகசியத்தை அறிந்து அனுபவிக்கிறவனுக்குச் சொந்தமேயொழிய பணத்தைக் கொடுத்துவாங்கி வீட்டில் வைத்துப் பாதுகாப்பதனாலேயே ஒருவனுக்குச் சொந்தமாகாது. திவான்பகதூர் அய்யரவாள் ஸம்ஸாரத்தின் காதில் வைரக்கம்மல் பச்சையும் சிவப்புமாய் "டால்" அடிக்கிறது. அய்யரவாளுக்காவது அந்த அம்மாளுக்காவது கல் பரீக்ஷை தெரியாது. செங்கல் கருங்கல் இந்த இரண்டு கல்தான் தெரியும். எதிர் வீட்டுத் தட்டான் தினம் அந்த அம்மாள் ஸ்நானத்துக்குப் போகும்போதும் வரும்போதும் பல வேளைகளில் அந்தக் கம்மலின் ஜிலுஜிலுப்பைக் கண்டு ஆனந்திக்கிறான். இதை அய்யரவாளிடத்தில் சொன்னால், "இந்தக் கம்மல் தன்னுடையதென்று அந்த தட்டாரப் பயலைக் கோர்ட்டில் வியாஜ்யம்போடச்சொல்லும், அவனுக்குச் செல்லுமோ பார்ப்போம்" என்று நகைக்கிறார். "இந்தக் கம்மல் செய்யும்போது நாம் வெள்ளைக்கல் தானே வைத்தோம், இப்பொழுது இளவெயிலில் பார்த்தால் பச்சையும் சிவப்புமாயிருக்கிறதே, தட்டான் ஏமாற்றிவிட்டானோ என்னவோ!" என்று அந்த அம்மாள் சந்தேகிக்கிறாள். கம்மலுக்காகக் காதுகுத்தின வலியும் அதை சுமக்கிறபாரமும் தான் அம்மாள் அறிந்தது. ஹைகோர்ட் வக்கீல் முதலியார் இந்திரனுடைய குதிரைகளுக்குச் சமமான இரண்டு குதிரைகள் கட்டிய வண்டியில் கச்சேரிக்குப் போகிறார். வழியிற்போகும் ஜனங்களெல்லாம் குதிரைகளைப் பார்க்கிறார்களேயொழிய முதலியாரைப் பார்க்கிறதில்லை. அதில் அவருக்கு வெகுவருத்தம். இத்தனைக்கும் அவர் ஜரிகைத் தலைப்பாகையும், தங்க கடியாரச் சங்கிலியும், மேகம் போன்ற அவர் கருப்பு தேகத்தில் மின்னல்கொடிபோல் விளங்குகின்றன. வழியில் போகும் குதிரைவியாபாரியாகிய ஒரு துலுக்கன் அக்குதிரைகளின் நீண்ட கழுத்தையும், மயிலிறகுபோன்ற அவைகளின் வாணத்தையும், ஒன்றையும் லக்ஷியம் செய்யாத அவைகளின கம்பீரமான பார்வையையும் கண்டுமயங்கி, "சட்டை தலைப்பாகை, கடியாரச் சங்கிலி உள்பட நாலு முதலி

யார் சேர்ந்தாலும் ஒரு குதிரைக் கீடாகாது' என்று சிரிக்கிறான். ஆகையால் அக்குதிரைகள் அவைகளால் வருத்தமடைகிற முதலியாருக்கு சொந்தமா, அல்லது அவைகளுடைய பெருமையை உள்ளபடி அறிந்து ஆனந்திக்கிற துலுக்கனுக்கு சொந்தமா; என்பது பெரும் சந்தேகத்திலிருக்கிறது; ஹைகோர்ட் ஜட்ஜிகள் இன்னும் ஒரு தீர்மானத்துக்கு வரவில்லையாம். ஆகையால் உள்ளபடி அனுபவிக்கத் தெரிந்தால் ஒன்றையும் விலைகொடுத்து வாங்காமலே அனுபவிக்கலாம்.

“மூன்றாவது நோயற்ற வாழ்வே வாழ்வென்றாலும், அந்த வாழ்வுக்கும் ஒருநாள் முடிவு வந்துவிடுகிறது. எவ்வளவு வஜ்ர தேகமும் ஒருநாள் சாகவேண்டியதுதான். இருக்கிற வரையில் ருசியாய் சாப்பிடலாம். ஆனால் கொஞ்ச நாளைக்குள் இந்த இழவு சாப்பாடு அலுத்துப்போய்விடுகிறது. மேலும் நல்ல சாப்பாட்டிலேயே பழகின நாக்கிற்கு ஒருநாள் சமையல் பிசகிப்போய்விட்டால், அன்றைக்கு அரைப்பட்டினி, வீட்டில் பெரிய சண்டை. இன்னொரு நாள் பசிக்கிறவேளைக்குச் சமையல் ஆகாவிட்டால், அப்பொழுது வருகிற கோபத்துக்குக் கணக்கு வழக்கில்லை! தலைவலியும் கிறு கிறுப்பும் வந்து விடுகிறது. இந்த சாண் வயிற்றிற்கு இத்தனை இழவு! “இடும்பைகூரென்வயிறே! உன்னோடு வாழ்தல் அரிது! அரிது!! அரிது!!!”

“நான்காவது, கீர்த்தியாவதென்ன? நாமிருக்கும்பொழுதும் நாமிறந்தபிறகும் நம்மைப் பற்றிப் பிறர் புகழ்ந்துகொள்வதே! அதனால் நமக்கென்ன லாபம்? தேகம் ஒரு சுற்றுப் பருக்குமா? அல்லது ஒரு அங்குலம் உயருமா? புகழ்கிறதனாலுண்டாகும் லாப நஷ்டம் புகழ்கிறவனைச் சேர்ந்தது! புகழப்படுகிறவனுக்கென்ன ஆயிற்று. இப்படி, நாமிருக்கும்போதே கீர்த்தியினால் லாபமொன்றுமில்லை என்றால் நாமிறந்த பிறகு அதனாலென்ன பயன்?

கீர்த்தி என்பது ஒரு மத்தாப்பூ வெளிச்சம். இந்தக்கோயில உற்சவத்தில் ஒரு நாளிரவு மாயவரத்திலிருந்து ஒரு தேவடியாள் வந்து, கும்பலில் நுழையாமல் தூரத்தில் நின்றபடி சுவாமிதரிசனம் செய்துகொண்டிருக்கும்போது, அங்குநின்ற சிறுபிள்ளைகளிலொருவன் தன் தோழனைப்பார்த்து “இது யாரடா புதிதாயிருக்கிறது! பார்வைக்கு நல்ல லக்ஷணமாயிருக்கிறாள்” என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே ஒருபச்சை மத்தாப்பூ கொளுத்தப்பட்டது. அவளும் மேற்சொன்ன வார்த்தை காதில் விழுந்து கொஞ்சம் மந்தஹாஸத்துடன் வெளிச்சத்தில் வந்தாள். உடனே அந்தப் போக்கிரிப் பயல் “சீ! இந்த உதட்டுக்குப் புன் சிரிப்பும் வேண்டுமா! அம்மிக்குழவி கட்டிவிட்டாற்போல் தொங்கிக் கிடக்கிறதே உதடு. முகமும் மஞ்சளரைக்கலாம்” என்று சொல்லித் தன் முகத்தைத் திருப்பிக்கொள்ளவே, அந்தத் தேவடியாள், சிறுபெண் பாவம்! வெட்கித்தலை குனிந்து அன்றிரவே யாரிடத்திலும் சொல்லிக்கொள்ளாமல் மாயவரத்துக்கு நடந்து விட்டாள். மறுநாள் அவளுடைய பந்துக்கள் அவளைக் காணோமென்று ஊரெல்லாம் தேடினார்கள். அதுபோலத்தான் இந்தக் கீர்த்தியும்! அதன் வெளிச்சத்திலகப்படாமல் கொஞ்ச தூரத்திலிருப்பதே உத்தமம். சமீபத்தில் வந்தால் நம்மிடத்தில் ஏதாவது அற்பகுற்றங் குறைகளிலிருந்தாலும் அதை ஒன்றுக்குப்பத்தாய் விளக்கிக்காட்டும். உலகத்தில் குற்றங் குறைகளில்லாதவன் யார்? நம்மைப்போல் கொஞ்சம் தாடி மீசை அதிகமாயிருந்தால் தப்பித்தவறி மத்தாப்பூவின் நெருப்பு தாடியில் பிடித்துக்கொண்டாலும் பிடித்துக்கொள்ளும்! ஒருவன் சொல்லுகிறான்: “நம்முடைய சாஸ்திரிகள் நாலு வேதமும் ஆறு சாஸ்திரமும் தலை கீழாகச் சொல்லுவார்.” அதைக்கேட்ட இன்னொருவன், “அப்படியா! அதனால் தான் தலை கழுத்தில் நிற்கிறதில்லைபோலும்” என்று குறும்பாக பதில் சொல்லுகிறான். கீர்த்திகுட்பட்டால் நம் தலையும் இப்படி உருள வேண்டியதுதான்.

ஒருவன் கீர்த்திபெற்றுவிட்டதனாலேயே அவனுடைய யோக்கியதை அதிகரித்து விடவில்லை. கீர்த்தியென்பது ஏற்கனவே இருக்கிற (அ)யோக்கியதையைப் பிறருக்கு எடுத்துக்காண்பிக்கிற ஒருவெளிச்சமேயொழிய வேறல்ல. இருட்டிலிருந்தாலும் அழகு அழகுதான், நாம் எங்கேயிருந்தாலும் நம

யோக்கியதையைக்கொண்டு நம்மனது திருப்தியடைந்தாற் போதாதா? நாமிறந்த பிறகும் நம் கலையைப்பிறர் உருட்டவேண்டுமா? எவ்வளவு கீர்த்தி பெற்றவனாயிருந்தாலும், ஒருநாளில்லாவிட்டால் ஒருநாள் அவன் பெயரை உலகம் மறந்துவிடுவது நிச்சயம். அவனிறந்தபிறகு நூறுவருஷம் அவன் பெயர் நீடித்திருந்தால் பெரிய லாபம். அதற்கு மேற்பட்டிருக்க பாக்கியம் பெற்றிருந்தாலும், மகாப் பிரளயகாலத்தில் உலகமே அற்றுப்போகிறபொழுது உலகத்திற் பிறந்திறந்த ஒருமணிகப் பூச்சியின் பெயர் நிற்கப் போகிறதா? ஒருமகாராஜா தன்னுடைய பெயரும் தன் குதிரையின் பெயரும் நீடித்திருப்பதற்காக ஒருபெரிய கோவில்சட்டி ஒரு கோபுரத்தில் தன் உருவத்தையும் இன்னொரு கோபுரத்தில் தன் குதிரையின் உருவத்தையும் அமைத்து அவைகளின்கீழ் இருவருடைய பெயரையும் கருங்கல்லில் வெட்டிவைத்தார். முந்நூறு நானூறு வருஷத்துக்கெல்லாம் மகாராஜாவின கோபுரம் இடிந்து விழுந்துவிட்டது. குதிரையின் கோபுரம் மட்டும் இன்னுமிருக்கிறது. குதிரை பெற்ற கீர்த்தியும் பாக்கியமும் மகாராஜாவுக்கில்லை. மகாராஜா இன்னாரென்று தெரியாது. அதனால் மகாராஜாவைக்காட்டிலும் குதிரைக்கு யோக்கியதையதிகமாகிவிடுமா?

மேலும் ஒருவனுடைய பெயர் நீடித்திருப்பதில் என்னலாபம்? ஆயிரம் வருஷம் கழித்து நம்மை "ராஜாவையர் என்றொரு மகானிருந்தார்." என்றுசொன்னாலென்ன? "ராஜாவையர் என்றொரு மடையனிருந்தா"னென்று சொன்னாலென்ன? பெயரிலென்ன வந்துவிட்டது? நாம் உள்ளபடி வாழ்ந்தவாழ்வு நமக்கே தெரியாது; கடவுளொருவருக்குத்தான் தெரியும். அவர் பார்வையில் நம் செயல்கள் சரியாயிருந்துவிட்டால் பிறர் நம் பெயரைச் சொன்னாலென்ன? சொல்லாவிட்டாலென்ன? அகஸ்தியருடைய சகோதரர் இன்னாரென்று தெரியாது. உபநிஷத்துக்கள் எழுதினவர்கள் யாரோ? சீதையைக்கொண்டுபோனவன் இன்னானென்று பக்ஷி மிருகங்களுக்குக்கூட வெகு நன்றாய்த் தெரியும். திரௌபதியின் துகிலுரிந்தவன் பெயரைச் சொல்ல ஆணும் பெண்ணும் வெட்கப்படுகிறார்கள். முன்சொன்ன ரிஷிகளைப்போல் பெயரில்லாத கீர்த்தி மேலா? பின்சொன்ன பெயர்வழிகளைப்போல் ராவணனென்று பெயருள்ள கீர்த்தி மேலா? நம்மை "ராஜாவையர் என்று ஒரு திருடனிருந்தான்" என்று சொல்வதைக் காட்டிலும், பெயரில்லாத ஒரு மௌனியிருந்தாரென்று சொன்னாற் போதும்! அவ்வளவு பாக்கியம் நாம் பெறுவோமா?

"ஐந்தாவது: ஸங்கீதஸாஹித்ய கலாஞானத்தைப்பற்றி விசாரிப்போம். இவ்வுலகத்தில் ஸங்கீதஸாஹித்யமட்டுமில்லாவிட்டால் கொஞ்சம் யோக்கியமானவர்கள் இவ்வளவு நாள் குடியிருக்கமாட்டார்கள். எல்லாம் முன்னமேயே சப்பாத்துக்கள்ளியும் காட்டாமணக்கும் புளைத்து இரண்டுகால் மிருகங்களும் நாற்கால் மிருகங்களும் ஸஞ்சரிக்கிற காடாகியிருக்கும். (அதனால் தான் நம்மிந்த கோபுரத்துக்கு வரவிட்டு இவ்விடத்தில் காட்டாமணக்குச் செடிகள் முன்போல் அவ்வளவாக வளருகிறதில்லை.) பிறவிப்பிணிக்கோர் மருந்தாகிய பூலோகமாம் மண்ணுருண்டை மாத்திரையை இழைத்து சாப்பிட ஏற்பட்ட தேரா தேனும் பாலும் போன்றவை இந்த ஸங்கீத ஸாஹித்யங்கள். நல்ல வித்வானுடைய பாட்டுக்கச்சேரியில் உட்கார்ந்துவிட்டால் பொழுதுபோவது தெரிகிறதில்லை; என்ன துக்கங்கள் கவலைகள் இருந்தாலும் எல்லாம் மறந்துபோய்விடுகின்றன. ஒரு கணித சாஸ்திரி நக்ஷத்திரங்களின் சஞ்சாரத்தைப் பற்றிக் கணக்குப் போட்டுக் கொண்டிருக்கையில் சாப்பாட்டை மறந்து விட்டதாகக் கேள்வி. ராமாயணம் முதலிய மகாகாவியங்களைப்படிக்கையில் நாமிருப்பது பூலோகமோ கைலாஸமோ என்று சந்தேகமுண்டாகி விடுகிறது. ஹரிச்சந்திர விலாசத்தில் சந்திரவதி தன் இறந்த குழந்தையை எடுத்துக்கொண்டு மயானத்துக்குப் போவதைப் பார்த்தால் கல்லுங் கரைந்துருகும். சாகுந்தல நாடகத்தில் சகுந்தலையும் அவள் தோழிகளும் பேசிக்கொள்வதைக் கேட்டால் எவ்வளவு கிழவனுக்கும் ஒருதரம் பாலியம் எட்டிப்பார்க்கிறது. இவைகளையெல்லாம் அனுபவிக்கையில் நம்மனதிற்றோன்றுவதென்னவென்றால் "இப்படிப்பட்ட துக்கங்கள் அவரவர்களுக்கு வந்தால் யார்தான் அழமாட்டார்கள், இப்படிப்பட்ட சுகங்கள் நேர்ந்

கால் யார்தான் சந்தோஷப்பட மாட்டார்கள், இப்படிப்பட்ட ஸங்கீதத்தைக் கேட்டால் யார்தான் ஆனந்திக்கமாட்டார்கள். ஆகக்கூடி, சுக துக்கங்கள் எல்லாரையும் ஒரேமாதிரியாகத்தான் பாதிக்கின்றன; இதனாலேயே நாமெல்லாரும் ஒன்றுதான் என்று ஏற்படவில்லையா? அப்படியிருக்க நான் வேறு நீ வேறு என்று பிறரை ஹிம்ஸித்து நாம் சுகப்படக்கருதுவது எவ்வளவு மடைமை,! 'ஏனடா உனக்கிந்த விருதாச் சண்டை இதிலுனக்கென்ன மிச்சம்! மிஞ்சுவ தவனொருவனே, போய் அவனைத்தேடு!'' என்று இம்மாதிரி எண்ணங்கள் உண்டாகின்றன. ஸரஸ்வதியின் மகிமையே மகிமை!

ஆனால் எவ்வளவு தேன்பால் விட்டாலும் மாத்திரையின் கசப்பு கசப்புதான். பாடும்பொழுது நிச்சப்தமாய் கவனித்தவர்களெல்லாம் பாட்டுக் கச்சேரி கலைந்ததும் முணுமுணு என்று உலகத்து உப்புப் புளி சமாசாரங்களைப்பற்றிப் பேசுவதைக் கேட்டால் எவ்வளவு அருவருப்பாயிருக்கிறது. ஒருவன் சொல்லுகிறான் "ஓகோ அஸ்தமித்து ஜாமமாகிவிட்டதே! இனிமேல் வீட்டுக்குப் போனால் சாத்தில் தீர்த்தம் விட்டிருப்பார்களே" என்றேங்குகிறான். இவன் அவசரமாய் வீட்டுக்குப் போகையில் இன்னொருவன் இவனைப் பார்த்து "ஏனையர் மேல்விழுந்து காலை மிதிக்கிறீர்" என்று இவனோடு சண்டைக்கு வருகிறான். பாட்டுக்கச்சேரியின் சுகமெல்லாம் நாய் குப்பைமேட்டில் அனுபவித்த சுகத்தைப்போல் அவ்விடத்தை விட்டு எழுந்ததும் பறந்துபோய்விட்டது. நாடகம்பார்த்துத்திரும்புகிறவன்முகத்தில் மூத்தவள் பிரத்திபக்ஷமாயிருப்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம்.

"இப்படியே தான் ஸாஹித்தியத்திலேயும். காவ்ய நாடகங்கள் சுகத்தைக் கொடுப்பது போலவே துக்கத்தையும் கொடுக்கின்றன. ஏனெனில் அவைகள் பிரபஞ்சத்தின் விநோதத்தையும் மனோதர்ம சக்தியின் மகிமையையும் இவற்றை சிருஷ்டித்த கடவுளின் லீலாவிபூதியையும் விளக்குவதுபோலவே மனிதனுடைய அற்பத்தனத்தையும் விளக்குகின்றன. மேலும் நமது ராமாயண சாஸ்திரிகளை நல்ல சித்திரை மாசத்து வெயிலில் வியர்வைசொரியச்சொரிய நிற்க நிழலில்லாத சாலையில் பிரயாணம் செய்கையில் "ராமாயணத்தில் விபீஷணன் ராமனை சரணமடைகிற சுலோகங்களை தயவு செய்து திருவாய்மலர்ந்தருளி அர்த்தம் சொல்லவேண்டு"மென்று கேட்டால், கன்னத்திலொரு அறைஅறைந்து அங்கேயே நம்மைக் கொலைசெய்து விடுவார். எப்பேர்ப்பட்ட வரகவியையும் "எங்கள் வீட்டுக் கொல்லையில் பாசிபடிந்து நாற்றமெடுத்து தவளை நீந்தும் சேற்றுக்கேணியையும் எங்கள் வீட்டுப்போழித்திண்ணையில் சாகக்கிடக்கும் எனது 90 வயதுப் பாட்டியாரையும் பற்றி தத்க்ஷணமே இரண்டொரு நேரிசை வெண்பாக்கள் பாடவேண்டு"மென்று கேட்டால் திண்டாடித்திணறிப்போவான். கவிகள் ஸ்தோத்திரம் செய்வதெல்லாம் அழகுள்ள வஸ்துக்களையே! உலகத்திலோ சேற்றுக்கேணி முதலிய அழகற்ற வஸ்துக்களுக்குக் குறைவேயில்லை. இப்பேர்ப்பட்ட உலகத்தில் ஸங்கீத ஸாஹித்தியமென்ன வேண்டியிருக்கிறது. கலா சாஸ்திரக்ஞானத்தை ஆராய்ந்தாலும் இப்படித்தான். ஆகாசத்தில் உருளும் நக்ஷத்திரங்களைக் கணக்கிட்டவர்களில்லை. நீரில் வாழும் பூச்சிமுதல் திமிங்கலம் வரையுள்ள ஜந்துக்களை எண்ணினவர்களில்லை. இவ்வுலகத்தைத் தவிர வேறு உலகங்கள் இருக்கின்றனவாவென்றும் அவைகளில் மனிதர்களாவது வேறு ஜெந்துக்களாவது குடியிருக்கிறார்களாவென்றும் ஒருவருக்கும் தெரியாது. ஒரு மூட்டுப்பூச்சியின் வாழ்வையாய்ந்தறிய ஒரு மனிதனுடைய வாழ்நாள் முழுவதும் போதாதாம். இப்படியிருக்க இந்த மனிதப்பூச்சியின் ஞானம் எவ்வளவு தூரம் செல்லும!" (இப்படிக் கரையில் விழுந்த மீன்போல் தள்ளாடி தத்தளித்துக்கொண்டு யோசிக்கையில் கோவில் மணி மூன்றாவது ஜாமமடித்தது. பிரம்ம முஹூர்த்தம் வந்துகொண்டிருந்தது.)

"ஆனால் இவ்வாழ்க்கை முற்றிலும் பயனற்றதா? உலகத்தில் தேடத்தக்க வஸ்துக்கள் ஒன்றுமில்லையா?—அடே மடையா! இவ்வளவு நேரம் யோசித்தாயே ஏதாவது இருந்ததா?—நிச்சயமாய் ஒன்றுமில்லையா? நிச்சயமாய் ஒன்றுமில்லை—மூன்றுதரம் சொல்லு—முப்பதுதரத்துக்கு ஒன்றுமில்லை." என்றிப்படி தனக்குள்ளேயே இருவருடைய சம்பாஷணை மனக்காதில் கேட்டது.

உடனே ஒரு பெருமூச்சு விட்டான். அப்பொழுது தன் ஹிருதயத்தைச்சுற்றி வெகு நாளாய்க் கட்டப்பட்டிருந்த ஒரு இருப்புச் சங்கிலி தரிக்கப்பட்டதுபோல் தோற்றிற்று. மார்பு பூரித்தது. சுற்றுமுற்றும் பார்த்தான். உலகமெல்லாம் எழுதிய சித்திரம் போலும் கனவிற்காணு முருவம்போலுமிருந்தது. இந்த உண்மையை இத்தனை நாளாய் அறியாமற்றவித்தோமே என்று ஆச்சரியப்பட்டான். இன்னும் இதை யறியாமலுலகத்தில் திண்டாடுகிறவர்களை நினைக்க அவனுடைய ஆச்சரியம் இன்னும் அதிகரித்தது. உடனே கலகலவென்று சிரித்தான். ஆகாசத்தை மேல் வாயாகவும் பூமியைக் கீழ் வாயாகவும் சூரிய சந்திர நக்ஷத்திரங்களையும், மலை குன்று, மரம் செடிகளையும் இருவாய்ப் பற்களாகவும், சாவை இரைப்பையாகவும் வைத்துக்கொண்டு இத்தனைநாளாய் இவனை விழுங்கிவிடக்காத்திருந்த முகலைபோல ற இப்பிரபஞ்சத்தை இன்றைக்கு இவன் ஒருவனுய் தைரியமாய் எதிர்த்துப் பின்வருமாறு பதில் சொல்ல ஆரம்பித்தான். அதாவது:—

பிரபஞ்சமாயை இவனைப்பார்த்து ராவணன் சீதையைப்பார்த்துச் சொன்னதுபோல் (குடியைக்கெடுக்கிற எண்ணத்துடன் திருட்டுப் புன் சிரிப்புக்கொண்டு) "வீணாய்த் துள்ளாதே, இந்த உலகமுழுவதும் எனக்கிரையென்பதுநிச்சயமாய்த் தெரிந்த விஷயம்; நீமட்டும் என்னிடமிருந்து தப்பிக்கப்பார்த்தால் முடியுமா? உனக்குற்ற துணை யாருமில்லை; உன்னை ஆதரிப்பாரில்லாமல் இங்கே தள்ளியாய்விட்டது. இனி என்னைக் கும்பிட்டு வழியாயிருந்தால் நாளடைவில் சுகமாய் சாகலாம். வீணாய்த் துள்ளினல் அதிக காயம் பட்டு அதிக கஷ்டப்பட்டு சாகவேண்டும், இதுதான் வித்தியாசம்" என்றது.

அதற்கிவன் சீதையைப்போல் (கண்களில் நீர் ததும்பக் கடுங்கோபத்துடன்) "உனக்கு என்னைக்கொல்ல வலிமையிருக்கிறதென்பது எனக்கு நன்றாய்த் தெரியும்; அதைப்பற்றி நீ வீணாய்ப் பிதற்றிக்கொள்ளவேண்டாம்.— ஆனல் நான் தேடுவதுமட்டும் உன்னையல்ல, நான் கும்பிடப்போகிறதும் உன்னையல்ல என்கிற சங்கதியை நீ என்னை நரநரவென்று கடித்துச் சாப்பிடும்பொழுதும் சொல்லிக்கொண்டேதான் சாவேன்!" என்றான்.

"ஆனல் இப்படி வேலைபற்ற உலகத்தில் நாம் ஏன்வந்தோம்! நாமாய்வந்தால் "நாம்" என்பது யார்? இல்லாவிட்டால் நம்மை அனுப்பினது யார்? என்று தேடுகிறவேலையைச் செய்வோமே" என்று முதலை வாயிலகப்பட்ட யானைபோல் ஆதிமூலப்பொருளைத் தேட ஆரம்பித்தான்.

(இன்னும் வரும்.)

ஸ்ரீ ரராஜநாயகி.

—(+)—

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

(அதிகாரம்—5.)

இப்படி பத்து வருஷம் சென்றது இனி நாம் பூவரசநல்லூரை விட்டு வேறு ஒரு கிராமத்துக்குப் போவோம். கோயமுத்தூர் ஜில்லாவில் கமலாவடி என்று ஓர் கிராமம் இருக்கிறது. அந்த கிராமத்தில் நடுவீட்டு நாராயண சாஸ்திரி என்று ஒருவர் இருந்தார். இவர் சம்சாரம் பிறந்த ஊர் பூவரசநல்லூர். இவர் மைத்துனர் வெங்கிடராம சாஸ்திரி பூவரசநல்லூரில் ஆஷாடபூதிகளுக்குள் பேர்பெற்றவர். கழுத்தில் கண்டருத்ராக்ஷம் தூக்கக்கூடாமல் போட்டிருப்பார். நெற்றியில் விபூதி பட்டைபட்டையாய் நோய் வந்த மாடுகளுக்கு சூடு போட்டதுபோல் பெரும்பெரும்பட்டையாகப் போட்டிருப்பார். ஆனல் அந்தவூரில் இவர் கெடுக்காத குடி கிடையாது. அவரிடம் ஒருவரும் சண்டைபோட்டுப் பகைத்துக் கொள்ளவேண்டியதில்லை. பணக்காரனுகவாவது அல்லது நல்ல வேலையோடாவது தகுந்த அந்தஸ்துடன் ஒருவன் இருந்தாற் போதும். உடனே அவன் இவருக்கு விரோதிதான். ஏனென்றால் இவர் குடும்பம் நல்ல குடும்பமாயிருந்தும் இவர் தகப்பனருடைய கெட்ட நடத்தையினல் சொத்துக்குத் தகுந்த கடன் வைத்துவிட்டுப்போய்விட்டபடியால் இவருக்கு எல்லோரையும் தன்னைப்போல் செய்துவிட வேண்டுமென்ற எண்ணம். ஆகையால் நல்ல ஸ்திதியில் ஒருவனைக்கண்டால் அரைக்ஷணமேனும் இவர் பொறுக்கமாட்டார். உடனே அவனுக்கு விரோதமாக ஒருவனைத் தூண்டிவிட்டு வியாச்சயங்கள் செய்யச்சொல்லி தான் பொய்சாக்ஷிக்குவர இரண்டு கக்ஷியிலும் விலை பேசிக்கொள்வார்.

யார் இவரை அதிகவிலைக்கு வாங்குகிறார்களோ அவர் கக்ஷியில் தான் இவர் சாக்ஷிசொல்வார். ஆனால் இவர் என்ன அக்கிரமம் செய்தும் தினந்தோறும் காலையில் காவேரியில் ஸ்நானம் செய்வதைமட்டும் விடுவதில்லை. காவேரியில் ஸ்நாநம் செய்து புலித்தோல்மீது உட்கார்ந்துகொண்டு ஜபம் செய்வார். அவர் புலித்தோல்மீது உட்காருவது அடித்துப்பிடுங்கும் கொடுமையில் புலியைவிட நான் மேலே என்று காட்டுவதுபோல் அவருடைய அக்கிரமங்கள் தெரிந்தவர்களுக்குத் தோன்றும். நெற்றியில் பட்டவர்த்தனங்கள் போட்டுக்கொண்டு கண்டருத்திராக்ஷங்கள் மடிசஞ்சி இதுகளுடன் காவேரியிலிருந்து வருவதை இவருடன் பழகாத ஒருவன் கண்டால் இவர் ஏதோ மகான் போலேயிருக்கிறது, இவரிடம் ஏதாவதுபதேசம் பெறலாமென்று நினைப்பான். ஆனால் அவரிடம் பெறக்கூடிய உபதேசம் பொய்சாக்ஷிசொல்வதும், அக்கிரமம் செய்வதையும் தவிர வேறு ஒன்றுமில்லை. இவர் இப்படி தான் வேஷம் போடுவதுமல்லாமல் யாராவது நெற்றியில் விபூதி போடாமற்போனால் இவர் அவனைக் கண்டித்து நெற்றியில் விபூதி போடாமலிருக்கலாமா என்பார். அவன் இவர் எதிரில் ஆகட்டுமென்று சொல்லி அவர் போனவுடன இவர் ஒருவர் விபூதி பூசிக்கொண்டு ஊரைக் கெடுப்பது போதாதா வென்பான். ருத்திராக்ஷப்பூனை என்கிற பெயர் இவருக்குத்தான் தகும். இவர் இந்த வேஷங்களெல்லாம் போடுவது போதாமல் ஏகாதசி விரதமும் அனுஷ்டித்து வந்தார். இப்படிப்பட்டவருக்குத் தங்கையாகிய நாராயண சாஸ்திரிகளுடைய சம்சாரம் வெங்கலக்ஷ்மி அம்மாளுடைய குணம் எப்படி இருக்கவேண்டுமென்பதை இதைப் படிப்பவர்களே நாம் சொல்லாமல் தெரிந்துகொள்ளலாம். அந்த கமலாவடி கிராமத்து வம்பர் மகாஜன சபைக்கு இந்த வெங்கலக்ஷ்மி அம்மாள் தான் அக்கிராசனாதிபதி. அக்கிராசனாதிபதியிடத்தில் புருஷனும் பயப்படவேண்டாமா, நமது நாராயண சாஸ்திரிகளும் அந்த சாஸ்திரத்தைத் தவறக்கூடியவரல்ல. எல்லாப்புருஷர்களும தங்கள் பெண்சாதிகளுக்குத் தலைவணங்கினால் நமது நாராயண சாஸ்திரி தன் பெண்சாதிக்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வார். வீட்டில் தினந்தோறும் வெங்கலக்ஷ்மி அம்மாளுக்கு கறி நறுக்கிக்கொடுக்கவும் புடைவைகள் தோய்த்துப் போடவும் வேறே ஆள்கள் வேண்டியதில்லை. எல்லாம் நமது நாராயண சாஸ்திரிகள் தான். வெங்கலக்ஷ்மி அம்மாள் ஒரு முழி முழித்துப்பார்த்தால் நாராயண சாஸ்திரிகள் பார்த்து ஓடிப்போய் விடுவார். நாராயண சாஸ்திரி வெளிப்பார்வைக்கு வெகுதைரியஸ்தர் போலிருந்தாலும் எதார்த்தத்தில் மிகவும் பயந்தவர். இவருக்கு சாந்திமுகூர்த்தமான சமயத்தில் ஒருநாள் வெங்கலக்ஷ்மி அம்மாளும் இவரும் படுக்குள்ளில் பேசிக்கொண்டிருக்கும்போது ஓர் பெரிய ஸர்ப்பம் வந்துவிட்டது. ஸர்ப்பத்தைக் கண்டதும் நாராயண சாஸ்திரி உளறிக்கொண்டு கட்டிலுக்குப் பின்புறம் ஓடிப்போய்விட்டார். வெங்கலக்ஷ்மி அம்மாளும் கூடவே அவர் பக்கம் ஓடினாள். நாராயண சாஸ்திரி ஒன்றும் செய்யத்தோன்றாமல் அடியே வீதியில் யாராவது புருஷாள் இருந்தால் கூப்பிடு என்றார். வெங்கலக்ஷிமி அம்மாள் நீங்களும் புருஷர்தானே என்றாள். நாராயண சாஸ்திரிகள் ஓகோ மறந்துவிட்டேண்டி சர்ப்பம் வந்த அவசரத்தில் தெரியவில்லை. நானும் புருஷன் தான் வேறு புருஷாள் யாராவதிருந்தால் கூப்பிடு என்றார். பிறகு வெங்கலக்ஷிமியம்மாள் கதவைத்திறந்து கூப்பிடவும் ஒருவர் பாம்பைப்பிடித்து குடத்தில் போட்டடைத்து எடுத்துக்கொண்டுபோய்விட்டார். நாராயண சாஸ்திரிகள் பிறகு ஸர்ப்பத்தை எடுத்துப்போய்விட்டார்களென்று கண்டு அது கிடக்கிறது இந்த ஸர்ப்பம் என்னை என்னபண்ணும்! அந்தக் குடத்தை என்னிடம் கொடுக்கச்சொல்லு நான் எங்கே வேண்டுமானாலும் கொண்டுபோகிறேன் என்று சொன்னார் அப்படிப்பட்ட நாராயண சாஸ்திரிகளுக்கு இரண்டு பிள்ளைகள். அவர்களில் பெரியவன் பெயர் ஸ்ரீனிவாசன், இளையவன் பெயர் சீதாராமன். இவர்களில் ஸ்ரீனிவாசனென்பவன் மெட்றிகுலேஷனுக்கு படித்துக்கொண்டிருந்தான். வெங்கலக்ஷ்மி அம்மாளுக்கு அவனுக்கு சிறுவ[illegible]திலேயே கல்யாணம் செய்து பார்க்கவேண்டும் என்ற ஆசை அதிகமாயிருந்தது. ஆனால் நாராயண சாஸ்திரிகள் அவன் மெட்றிகுலேஷன் பரிக்ஷை பாஸ் செய்தால் யாராவது பணக்காரர்கள் தன் பெண்ணைக் கொடுக்கிறேன் என்பார்கள். இப்போது செய்தால் ஒருவரும் லக்ஷியம் செய்யமாட்டார்களென்று சொல்லி காலதாமதம் செய்துவந்தார். இப்படியிருக்க ஓர் சமயத்தில் ஆஷாடபூதி வெங்கிடராம சாஸ்திரிகள் தன் தங்கையைப்பார்க்க கமலாவடிக்கி வந்திருந்தார். அந்த சமயத்தில் ஒருநாள் நாராயண சாஸ்திரிகள் வீட்டுக் கூடத்தில் ஒரு மந்திராலோசனை சபை கூடிற்று. அதில் மெம்பர்கள் : நாராயண சாஸ்திரிகள். ஆஷாடபூதி வெங்கிடராம சாஸ்திரிகள். வெங்கலக்ஷிமி அம்மாள் இம்மூவருமே. இதில் வெங்கிடராம சாஸ்திரிகள் அக்கிராஸனாதிபதி பட்டம் வகித்தார். வெங்கிடராம சாஸ்திரிகள் 'என்ன மாப்பிள்ளை நான் சொல்லுவதைக்கேளும் : வெங்கலக்ஷ்மி சொல்லுவது நியாயமாய்த்தான் இருக்கிறது. நமது குழந்தைக்கு இப்போது கல்யாணம் செய்யாமல் பின்னிட்டு எப்போத செய்கிறது ! அவன் சொன்னாப்பலே பசிக்கிறபோது சாப்பிட்டால் நன்றாயிருக்குமா, பசி போனபிறகு சாப்பிட்டால் நன்றாயிருக்குமா.'

வெங்கலக்ஷ்மி :—' அப்படிக்கேள் அண்ணா, நானும் ஒரு வருஷமாய்ச் சொல்லிக்கொண்டு வருகிறேன். இப்படியே இவாள் சாக்குச் சொல்லிக்கொண்டுவராள். நம்ம சீனு இப்போதுதான் அழகாய் குஞ்சலம் போல்இடுப்பில் எடுத்துக்கொள்கிறாப்போலே இருக்கிறான். இந்த சமயத்தை விட்டு அவன் தடியா

பிள்ளைபோலே வளர்ந்து நெட்டைப் பனமரத்தில் பாதி இருக்கும்போது தான் கல்யாணம் செய்வார்களா! இவளை நான் கல்யாணம் செய்துகொள்ளும்போது நான் இவள் முகத்தைப் பார்ப்பதற்கு ஆகாசத்தைப் பார்க்கவேண்டியிருந்தது. அதே மாதிரியாக பிள்ளைக்கும் இருக்கவேண்டுமென்று எண்ணியிருக்கா.'

நாராயண சாஸ்திரிகள் :—'வெங்கிடு நான் உள்ள சங்கதியைச் சொல்லுகிறேன் கேள்! நம்ம பையனுக்கு இப்போது கல்யாணம் செய்கிறதென்றால் ஒருவரும் மேல்விழுந்து பெண்ணைக் கொடுக்க வரமாட்டார்கள். 1. வெறும் சிகப்பை விலைகூறினால் ஒருவரும் சரியான விலைக்கு கேட்கமாட்டார்கள். 2. அதற்கும் ஓர் தங்கத்தைப்போட்டு நகையென்று செய்து கடைக்குக் கொண்டுபோனால்தானே விலைக்கும் கேட்கிறார்கள். 3. (நாராயண சாஸ்திரிகள் பேசும்போது எல்லாம் ஒன்று, இரண்டு, மூன்று என்று வக்கீல்கள்போல், பாய்ன்ட் பிரிக்காமல் பேசமாட்டார்.) நான் சொன்னால் உன் தங்கைக்குத் தெரியவில்லை. நீதான் சொல்லவேண்டும் நமது பையன்மட்டும் மெட்றிகுலேஷன் பாஸ் செய்யட்டும் எத்தனைபேர்கள் பிள்ளையில்லாமல் ஒருபெண்ணைமட்டும் வைத்துக்கொண்டு நமது பையனுக்கு கொடுக்கிறேன் என்பார்கள். நமது பையனுக்கும் கல்யாணம் ஆனதுபோலாகும். சொத்தும் கிடைக்கும். இப்போது கல்யாணம் செய்தால் அப்படிக் கிடைக்குமா? போன வருஷத்தில் மேலத்தெருவு கிட்டுவுக்கு கல்யாணத்திற்கு ஒரு பெண் இருந்தது. அவன் பையன் ஒருவன் சோகை பிடித்தாப்போல் இரண்டு மூன்று வருஷமிருந்தான். நான் இதைக்கண்டு அந்தப்பையன் இறந்துபோனால் நமக்கு பிள்ளையில்லாத சொத்து கிடைக்குமென்று அந்தகிட்டு பெண்ணை கல்யாணம் செய்து கொள்ளலாமென்று யோஜித்திருந்தேன். ஆனால் ஆறுமாதத்திற்கெல்லாம் அந்த நாசமாய்ப்போன பையன் பிழைத்துக்கொண்டுவிட்டான். பிறகு குண்டுபோலாய்விட்டான். நானும் இனி அந்த இடம் பிரயோஜனம் இல்லையென்று விட்டுவிட்டேன் அப்படி வேறு தக்க இடமாயிருந்தால் நானும் பார்ப்பேன். என்ன செய்கிறது! நமக்குத் தெரிந்ததாய் வேறொன்றையும் காணோமே! பிள்ளையில்லா சொத்தாயிருந்தாலும் சரிதான் அல்லது நோயாளியாயிருந்து சீக்கிரம் இறந்துபோகக்கூடிய பிள்ளையாயிருந்து பெண் ஒரேபெண்ணாய் இருந்தபோதிலும் சரிதான். உனக்கு ஏதாவது தெரிந்தால் சொல் என்றார்.'

வெங்கிடராமசாஸ்திரி.—மாபிள்ளை நீர் சொன்ன பிறகு இப்போதுதான் ஞியாபகத்தில் வருகிறது. நமது யோசனைக்குத் தகுந்தஇடம் எங்களூரில் இருக்கிறது. அவன் சொன்னப்பிலே எனக்கும் வெங்கலக்ஷிமிக்கும் எங்க ஊரு சம்பந்தம் கிடைப்பதில் வெகுதிருப்தி.

நாராயணசாஸ்திரிகள்.—எந்தஇடம்சொல் பார்ப்போம். எது எப்படி இருந்தபோதிலும் பணமட்டும் ஏராளமாக இருக்கவேண்டும்! பிள்ளை இருக்கக் கூடாது.

வெங்கலக்ஷிமி.—பெண்ணும் அழகாயிருக்கவேணும்! நன்றாய் வீட்டுக்காரியம் செய்யவேணும்.

நாராயண சாஸ்திரி.—பெண் எப்படியிருந்தால் என்னடி, நகைபோட்டால் மொட்டைத் தலைக்குக்கூட நன்றாயிருக்கும். பணமும் இருந்து பிள்ளையில்லா சொத்தாயிருந்தால் எல்லா சொத்தும் நம்மது தானே. நாம் ஏராளமான நகை பண்ணிப்போட்டால் பெண் அழகாய் விடுகிறது! வீட்டுக்காரியம் தெரியாமல் போனால்தான் என்ன. ஒரு பரிசாரகனைப்போட்டால் செய்துவிடுகிறான்.

வெங்கிடாராமசாஸ்திரி.—என்ன நான் சொல்வதற்குள் நீங்கள் மேல்யோசனைக்குப் போய்விட்டீர்களே! அவன் சொன்னப்பலே இடத்தைத்தெரிந்து கொண்டல்லவா மேல்யோசனை செய்யவேண்டும்.

வெங்கலக்ஷிமி.—சொல்லப்பா. யாரு? எனக்குத் தெரியாததுகூட உண்டா? யாருவீடு சொல் சீக்கிரம்.

வெங்கிடாராமசாஸ்திரி.—'காமேசுவரய்யர் உங்களுக்குத் தெரியுமல்லவா. அவர் தம்பி சேஷய்யர் பெண்ணுதான்.'

நாராயணசாஸ்திரி.—நல்லஇடம் பார்த்துச்சொன்னாய்! அவர்களெல்லோரும் ஒன்றாயிருக்கிறார்களே. என்துரதிரஷ்டம் அந்தக்குடும்பத்திலும் ஒருபிள்ளை இருக்கிறதே என்னசெய்கிறது.

வெங்கலக்ஷிமி.—சேஷய்யர்பெண் நல்ல அழகுதான், நான் பார்த்திருக்கிறேன். அது நமக்குக் கிடைத்தால் போதும்.

நாராயணசாஸ்திரி.—அழகு ஒன்று இருந்தால் போதுமாடி அழகு பணமாகுமா. பணமழகாகும்! அந்தப்பெண்ணின் தாய்க்குப் பிறகு ஒன்றும் பிறக்காமல் இருக்கவேண்டும். 1. பிறந்தாலும் பிள்ளை ஆகாது, 2. அந்தக்குடும்பமும் ஒன்றாயிருக்கிறது நமக்காகாது.

வெங்கிடாராம சாஸ்திரி.—மாப்பளே. எனக்குத் தெரிந்தமட்டில் இது நல்ல இடந்தான். பணம்ஏராளமாயிருக்கிறது. பெண்ணும் அழகாயிருக்கிறது.

நாராயண சாஸ்திரி.—எது எப்படி இருந்தால், என்ன அந்தக் குடும்பத்தில் ஒருபிள்ளை இருக்கிறதே என்னசெய்கிறது!

வெங்கிடாராம சாஸ்திரி.—இதற்கென்ன பிரமாதம் கல்யாணம் ஆனவுடனே அவன் சொன்னப்பலே சேஷய்யரைக் கலைக்க எத்தனை நாளாகும்! அரை நிமிஷத்தில் சேஷய்யரைப் பிரித்து விடுகிறேன். தாங்கள் இதற்காக யோசிக்கவேண்டாம்.

நாராயணசாஸ்திரி.—பிரித்துதான் வைக்கிறாய். பிறகு சேஷய்யருக்கு பிள்ளை பிறக்காது என்பது என்ன நிச்சயம். சில இடங்களில் பெண்ணுக்கு கல்யாணமானவுடனே கன்னிகாதான பலனாக பெண்ணுக்கு ஒரு தம்பியும் பிறந்து விடுகிறானே! இதற்கென்ன செய்கிறது.

வெங்கிடாராமசாஸ்திரி.—அதற்கும் நீங்கள் யோசிக்கவேண்டாம். சேஷய்யர் சம்சாரத்துக்கு வயதும் அதிகமாகிவிட்டது. அவன் சொன்னாப்பலே இந்தப்பெண் பிறப்பதே வெகு அதிசயமாயிருந்தது. இந்தப்பெண் பிறந்து ஒன்பது வருஷமாகியும் வேறேகுழந்தை பிறக்காமல் இனிமேல்தானா பிறக்கப்போகிறது, அதுவிஷயத்தில் நீங்கள் சந்தேகப்படவேண்டியதில்லை.

நாராயணசாஸ்திரி.—ஆனால் நல்லதுதான் நீ சொன்னபடி செய்யும் பக்ஷத்தில் அந்தப்பெண்ணை நான் கல்யாணம் செய்ய ஏற்பாடுசெய்கிறேன். ஆனால் நல்ல வரதக்ஷணை கொடுப்பார்களா.

வெங்கிடாராமசாஸ்திரி.—நீங்கள் பேசாதிருங்கள். நான் சகல ஏற்பாடுகளும் செய்துவிடுகிறேன்.

நாராயணசாஸ்திரி.—ஏதாவது அவசரப்பட்டு ஏற்பாடுசெய்து ஏமாந்துபோகாதே. 1. ரொக்கம் இரண்டாயிரம் ரூபாய்க்கு குறைந்த வரதெக்ஷணை வாங்ககூடாது. 2. மேலும் நமது சிலவுகளை அவர்களே போட்டுக்கொள்ள வேண்டும்.

வெங்கிடாராமசாஸ்திரி.—மாப்பளே, நான் இங்கே சொல்லும்போதே சற்றுமுன் பேசினதைவிட இப்பொழுது வெகு கிராக்கியாய் பேசுகிறீரே. அவர்கள் உங்கள் பிள்ளைக்கு கொடுக்க சம்மதிக்கிறார்களோ என்னமோ அதுவே தெரியவில்லை. நீர் அதற்குள் அவன் சொன்னாப்பலே, கல்யாணச் செலவு வரதெக்ஷணை சம்பந்தி உபசாரமுதல் யோசனைசெய்ய ஆரம்பித்து விட்டீரே நன்றாயிருக்கிறது! யாராவது சிரிக்கப்போகிறார்கள்.

நாராயணசாஸ்திரி.—ஆனால் உனக்கு நிச்சயமாகத் தோன்றவில்லையா. அவர்களுக்கு நம்ம பிள்ளைக்கு கொடுப்பதில் யோசனையென்ன நம்ம பிள்ளையைவிட அவர்களுக்கு வேறே வெகு உயர்த்தியாய் வந்துவிடப் போகிறானே.

வெங்கிடாராமசாஸ்திரி.—நீங்கள் யோசிக்கிறாப்போல் அவர்கள் மட்டும் யோசிக்கமாட்டார்களா. அவர்களுக்கும் உங்களைவிட சிலாக்கியமாய் அகப்படாமல் போனால்தான் உங்கள் பிள்ளைக்குக்கொடுக்க சம்மதிப்பார்கள். அவன் சொன்னாப்பலே கல்யாணத்திற்கு வரன்சம்பாதிக்கும் சமாச்சாரம் உங்களுக்குத் தெரியாதா. புருஷன் எங்கேயும் அலையவேண்டாம் அசலாத்துசேஷனுக்கு கொடுக்கலாமேயென்றால் பெண்சாதி ரகசியமாக அவனிடம், நெடுகிலும் தேடிப்பார்ப்போம். எங்கும்தேடி அகப்படாவிட்டால் அசலாத்துசேஷனுக்கு கொடுக்கலாமென்பாள். அந்த அசலாத்துசேஷனும் எங்கேயும் சிலாக்கியமாய் அகப்படாமல் போனால்தான் இந்த அசலாத்துப்பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொள்வான். அதுவரையில் அவனும் இந்தப்பெண்ணை அசலாத்துச் சேஷியாகத்தான் நினைத்திருப்பான். ஆதலால் அவன் சொன்னாப்பலே தாங்கள் தங்கள் பையன் பெருமையைமட்டும் பேசுவதில் என்ன பிரயோசனம். அவர்கள் சம்மதித்த பிறகு மேல்யோசனைசெய்வோம்.

நாராயண சாஸ்திரி.—அப்படியானால் நீ முன் போய் இதற்குவேண்டிய ஏற்பாடுகளைச்செய். நமக்கு ஆசையிருக்கிறதாகத் தெரிவித்துக் கொள்ளவேண்டாம். வலுவில்போனால் ஜாதி என்ன குலமென்ன என்று கேழ்ப்பார்கள். ஆதலால் யாரைப் பிடிக்க வேண்டுமோ அவர்களைப்பிடித்து அவர்கள் மூலமாய் அவர்கள் மனதை அறிந்து பிறகு அவர்களையே வலுவில் நமமிடம் அனுப்பவேண்டும்.

வெங்கிடாராமசாஸ்திரி.—வலுவில் அனுப்பினால் மேன்மேலே நீங்கள் பிகுசெய்துகொண்டால் என்ன செய்கிறது! நான் சற்றுப் பேசிக்கொண்டிருந்ததற்குள் முதலில் பிள்ளையில்லா சொத்தாயிருந்தால் போதும், எப்படியிருந்தாலும் கல்லியாணம் செய்யலாம் என்று சொன்னீர்கள். பிறகு அவர்கள் பெயரைச் சொன்னவுடனே அவன் சொன்னாப்பலே கல்யாணச்செலவு அவர்களே போட்டுக்கொள்ள வேண்டும். வரதெக்ஷணை ரூபாய் இரண்டாயிரத்துக்கு குறையப்படாதென்று கிராக்கிசெய்ய ஆரம்பித்து விட்டீர்களே.

நாராயணசாஸ்திரிகள்.—இல்லையப்பா நீ எப்படி செய்தாலும் சரிதான். அவர்களை மட்டும் சம்மதிக்கச செய்தால் போதும்.

வெங்கிடாராமசாஸ்திரி.—நல்லது அந்த வுபாயம் எனக்குத்தெரியும். முதலில் நான் காமேசுவரய்யரைப்பிடித்து அவர் மனதைக்கலைத்து அவரை சம்மதிக்கச்செய்கிறேன். அவர் சம்மதித்தால்போதும் அவர் ஒரே வீம்பாய் பிடிசதகாரியத்தை முடித்து விடுவார். அவன் சொன்னாப்பலே காமேசுவரய்யருக்கு கபடு சூது தெரியாது. அவரை நம்மவழிக்கு சீக்கிரம் கொண்டுவந்து விடலாம், நான் உங்கள் இஷ்டப்பிரகாரம் செய்கிறேன். இப்படி அந்த மீட்டிங்கில் யோஜித்து எப்படியாவது சேஷய்யர் பெண்ணைக் கல்யாணம் செய்துக்கொள்ளுகிறது என்று தீர்மானித்து வெங்கிட்ராம சாஸ்திரிகளை அதே காரியமாயிருக்கும் படிக்கும் அது விஷயமான யோசனைகளெல்லாம் நாராயண சாஸ்திரிகள் அவருக்குச் சொல்லிக்கொடுத்து அவரை பூவரசநல்லூருக்கு அனுப்பினார்.

(இன்னும் வரும்.)

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.

EXTRACT.

## SONGS FOR CHILDREN.

## "பாலர்க்கினிய கீதம்" *

### சரஸ்வதிஸ்தோத்திரம்.

இராகம்-மோஹனம், ஆதிதாளம்.

பல்லவி.

ஓவீணவதிவாணியென்முன் ஓடியேவாராய்

அநுபல்லவி.

ஓடியேவாராய் துயரோட்டிடநேராய் (ஓவீ)

சரணம்.

சந்ததமுன்னரவிந்த பதந்தன்னையே
சிந்தனைசெய்தேயுளம் நொந்துருகினேன்பாராய்
இந்தவேளையிலென்னை ஆள்வதுனக்கரிதா
சுந்தரிசிரந்தரி அருள்புரிகிருபாகரி
சா சதபகதபா கபகரிகசரீரி கபகரி
சரிகரிசதசாச தசரீ சரிகரிகபா கபதபதசா
தசரிகரி சரிசசதப கதபா கபகரிகப (ஓவீ)

---

இங்கிலீஷ் நோட்டு

1. கல்விக்கரசேகலைம்களே கருணாகரிநல்வரமருளே
செல்வக்கிளிதன்மொழியினளே சேவடியிணைதொழுதனமருளே (க)
2. எங்கள்மேல்கிருபைசெய்வாணீ எங்கும்புகழுளகல்யாணி
வைகுந்தன்சேயயன்ராணீ வாவீணபுஸ்தகபாணி (க)
3. மாதர்க்கல்வியுமோங்கிடவே மாதேயருள்புரியேந்திழையே
வானோர்போற்றிடும்பைங்கொடியே வந்தனமீதோசரஸ்வதியே (ச)
4. சிறுமியர்கள்கல்விதனை சீராய்கற்பதுகெடுதியென
கழறுஞ்சிலசிற்றறிஞர்களின் கொடிதாமறிவைக்கொய்தருளே (க)

---

(கார்த்தருள்வாய் என்னும் பார்ஸ்நாடகமெட்டு)

இராகம்-பியாக், ரூபகதாளம்.

கார்த்தருள்வாய் கலைமகளேநின துபதம்
கன்னியர்போற்றினோம் கருணைகூர்ந்தெம்மை (கார்)

---

* இஃது இந்துபால பாலிகா பாடசாலைகளின் மாணக்கர் மாணக்கிகளுக்கு உபயோகமாகும் பொருட்டு காவேரிப்பாக்கம் ஹிந்து பாலிகா பாடசாலையின் உதவி உபாத்தியாயர், கா. ரா. சடகோபாசாரியாரால் இயற்றப்பட்டு சே. ஸ்ரீராம ஐயங்கார் அவர்களால் பிரசுரிக்கப்பட்ட சிறு புஸ்தகத்திலிருந்தெடுக்கப்பட்டுள்ளது இச்சிறு புஸ்தகத்தின் விலை அணு 1.

1. வெள்ளைக்கமலத்தின் மீதிலமர்ந்தவளே எழிலினளே எமக்கருளே
வெள்ளைக்கலை யணிந்தாளே
கல்விச்செல்வந்தனை தந்தருள் தாயே
செல்வச்சிறுமியர் செப்புதற்கிரங்கி (கார்)

2. நான்முகனார் மகிழ்நங்காயென்முன் வருவாய்
வரந்தருவாய் அருள்புரிவாய் நம்பினேன் முன்பதம் பாவாய்
ஞாலத்தில்மாதர்க் கல்வியெங்குமோங்க
நன்கருள்செய்யயன் நாயகியேஅம்ப (கார்)

---

(தேமஜதிவ்வியமதீ சரஸ்வதி என்னும் மெட்டு.)

இராகம்-இந்துஸ்தானி, ஆதிதாளம்.

சேவடிபணிந்தேனே கலைமகளே (சேவடி)

1. சேவடிபணிந்தேனுன் சேயனையாண்டிட
தாமதமுனக்கேனோ தயைபுரிவாய் (சேவடி)

2. நான்முகன்தேவியே நம்பினேனுன்னையே
யான்முயலும்தொழிலும் நடந்தேறவே (சேவடி)

3. சஜ்ஜனபாலினி சரஸிருஹாஸனி
இச்சையின்படிவரமே ஈந்தருள்வாய் (சேவடி)

4. வித்யாரூபமாய் விளங்கிடும்பாவையே
நித்யமுமென்னிடத்தே நிலைத்திருப்பாய் (சேவடி)

---

(என்னுடன் நீ பேசாததுஞாயமோ என்னும்மெட்டு.)

இராகம்-செஞ்சுருட்டி, ஆதிதாளம்.

1. வாணியேயுன்பதம் போற்றினேம்யாமுமே
வந்தருள்செய்வாயினி வனஜபவன்சதியே (வா)

2. வெள்ளைக்கலையினளே வேண்டுகின்றோமுன்னையே
சொல்லருங்கல்விதனை சீராயுணர்த்துவையே (வா)

3. வீணைதரித்தவளே விமலகுணவதியே
விண்ணவர்போற்றும் மணிவிளக்கேகலைமகளே (வா)

4. சுந்தரரூபியே சுபமருள்தேவியே
இந்துமத பாலர்கள் / பாலிகா பாடசாலையோங்கவே (வா)

5. நிச்சயமாயருள்வோர் நினைவிடவேறுளர்
இச் சிறுவர்கள் / சிறுமியர் மிக வின்பமுறவேயருள். (வா)

---

## THE STORIES OF MAHABHARATA—FOR CHILDREN.

(*Specially written for the Vivekachintamani By S. Muthu Iyer B. A.*)

## மஹாபாரத கதைகள்—சிறுவர்களுக் குபயோகமாக எழுதப்பட்டன.

மூன்றாவது.

### ஆரணியபருவம்

### 1. பாண்டவர்கள் வனம் சென்றிருத்தல்.

இவ்வாறு தங்களுடைய வ்லியையும் அரசையும் சத்துருக்கள் வஞ்சனையாலே கவர்ந்துகொண்ட காலத்தில் பாண்டவர்கள் ஐவரும் மனைவி திரௌபதியோடும் பன்னீராயிரம் முனிவர்களோடும் சென்று காமியவனத்தை அடைந்தார்கள். அப்போது அச்செய்தியையறிந்த பந்துமித்திரர்களாகிய துருபதன், திஷ்டத்யும்னன், விராடன் முதலான அநேக அரசர்கள் அங்குவந்து அவர்களைக்கண்டார்கள். ஸ்ரீ கண்ணபிரானும் அவ்வாறே அவ்விடத்துக் கெழுந்தருளினார். அப்போது அவர்கள் தருமபுத்திரருக்குத் தக்ஷணமே போர்செய்து இழந்த ராச்சியத்தைத் திரும்ப மீட்பதென்றும பலவும் ஆலோசனைகூற ஸ்ரீ வாசுதேவர் கேட்டு அஃதெல்லாம் செய்யத் தக்கதன்று. பாண்டவர்கள் ஐவரும தமதுமக்களையும் தாயையும் மற்றப் பந்துக்களையும் அங்கங்கே உரிய இடங்களுக்கு அனுப்பிவிட்டுத் தாம் மாத்திரம் திரௌபதியோடு பன்னிரண்டு வருஷமும் குறித்தபடி வனத்தில் வாசம்செய்து அதன் பின் செய்யத்தக்க காரியங்களைச் செய்வதே நியாயம் என்று கூறினார். அதுகேட்டு எல்லாரும் அவ்வாறே ஆருக என்று ஒப்புக்கொண்டார்கள். பின்பு ஸ்ரீ கிர்ஷ்ணஸ்வாமியும் மற்ற வேந்தர்களும் அவரவர் இருப்பிடத்துக்குச் சென்றார்கள்.

### 2. அருச்சுனன் தவம்செய்து பாசுபதாஸ்திரம் பெறுதல்.

பாண்டவர்கள் ஐவரும் திரௌபதியோடும் வனத்தில் வாசம்பண்ணிக் கொண்டிருக்கையில், அங்கு ஒருநாள் வியாசமாமுனிவர் எழுந்தருளினர். அம்முனிவருக்குச் செய்யத்தக்க உபசாரங்களைச்செய்து தம்முடைய விருத்தாந்தங்களைப் பாண்டவர்கள் சொல்லியபோது அவர் அவர்களைத்தேற்றி உங்களைப்போல முன்னாளில் நளன் முதலான அநேக அரசர்கள் சூதினால் தமது நாடுநகரங்களை இழந்திருக்கிறார்களென்று அந்த விருத்தாந்தங்களையெல்லாம் சொல்லி அவர்களுக்குத் தைரியம் உண்டுபண்ணிப் பின்பு அருச்சுனன் சென்று பரமேசுவரனிடத்தில் பாசுபதாஸ்திரத்தைப் பெற்றுக்கொள்ளா விட்டால் பகைவர்களைச் செயித்தல் முடியாதென்றுகூறி, அவ்வருச்சுனனுக்கு ஒரு மந்திரத்தையும் உபதேசித்து முனிவர் தம்மிருப்பிடத்துக்குச் சென்றார்.

அருச்சுனனும் அவ்வாறே தவக்கோலம் கொண்டு நல்ல முகூர்த்தத்திற் புறப்பட்டு அங்கங்கே அநேக முனிவரது ஆசிரமங்களைத் தரிசித்துக்கொண்டு கடைசியில் கைலைமா மலைக்குச்சென்று சேர்ந்து அங்கு பரமேசுவரனைக்குறித்துத் தவஞ் செய்யத்தொடங்கினான். பஞ்சாக்கினி மத்தியில் ஒற்றைக்காலூன்றிச் சலியாமல் நின்று, ஐம்புலன்களையும் அடக்கி மனத்தை ஏகாக்கிரப்படுத்திச் சிவபெருமானது திருமேனியையே சிந்தித்து அரியதோர் தவம்செய்வதைத் தேவேந்திரன் கண்டு, அவன் மனநிலையைத் தெரிந்துகொள்ளும்படி உருவசி முதலிய அரமடந்தையரை அனுப்பினான். அவர்களும் வசந்தனைத் துணையாகக்கொண்டு அங்குவந்து தமது ஆடல் பாடல்களாலும் அழகினாலும் அவ்வருச்சுனன் மனத்தைக்கலக்கித் தம்வசப்படுத்த எவ்வளவோ முயன்றும் அவையொன்றும் பயன்படவில்லை. அருச்சுனன் யமனை உதைத்த திருவடிகளையும் யானைத்தோற்போர்வையையும், விபூதியணிந்த வெண்ணிறத் திருமேனியையும் சோமசூரியாக்கினி வடிவாகிய மூன்று கண்களையும் கங்கையைத்தரித்து கொன்றைமாலைச் சூடிய சடாமுடியையும் அல்லாமல் பின்றொன்றையும் கருதாதனாகித் தன்நிஷ்டையினின்று பேராதிருந்தான். அதனால் தேவகன்னிகைகள் தம் கருத்து நிறைவேறாமல் மீண்டார்கள். பின்பு இந்திரன் தானேவந்து பலவிதமாய்ப் பரிசோதித்து அருச்சுனன் மனவுறுதியைக்கண்டு மகிழ்ந்துபோனான்.

இவ்வாறு, அருச்சுனன் அருமையாகத் தவஞ்செய்தலை உமாதேவியார் சேடிகளாலறிந்து ஸ்ரீபரமேச்வரனுக்கு உணர்த்த, அப்பெருமானும் அருள்கூர்ந்து அருச்சுனனுக்கு வரம் கொடுக்கும் பொருட்டும், அவ்வருச்சுனனைக் கொல்லும்பொருட்டுத் துரியோதனனால் ஏவப்பட்டுப் பன்றிவடிவம் கொண்டுவந்த மூகாசுரன் என்னும் ஓர் கொடிய அசுரனை வதைத்து அருச்சுனனைக் காக்கும் பொருட்டும், ஓர் லீலையைக் கருதித் தாமும் மனைவியும் கணங்களும் வேடுருவம் கொண்டு அவ்வனத்தக்கு வந்தார்கள். அப்போது பன்றிவடிவங்கொண்ட மூகாசுரன் தன்மீது தாவிப் பாய்தலைக்கண்டு அருச்சுனன் தக்ஷணமே வில்லைவளைத்து ஒரு பாணத்தை முகத்தில் எய்யக், கிராதனாகிய பெருமானும் புதேகணத்தில் ஒரு பாணத்தை அப்பன்றியின் பின்புறத்தெய்ய, அவ்விரண்டு பாணங்களாலும் பன்றி உயிரிழந்தது. பின்பு கிராதன் அருச்சுனனை நோக்கி, நான் முன்னதாக எய்த பன்றிமேல் நீ யெவ்வாறெய்யத் துணிந்தாய்? அன்றியும் தவஞ்செய்கின்ற உனக்குப் பன்றியைக் கொல்லவேண்டிய காரணம் என்ன? உன் தவத்தில் அல்லவோ மனம் நிந்திருக்கவேண்டும்? பசுத்தோலைப் போர்த்த புலிபோல நீ செய்யும் தவமெல்லாம் சர்ப்பனையே! யென்று பலவாறு தூஷித்துப் போருக்கழைக்க அருச்சுனனும் போருக்குச் சித்தமாயினன். பின்பு இருவரும் அஸ்திரங்களைப் பிரயோகித்துச் சிறிது நேரம் போர் புரிந்தபின், அருச்சுனன் வில்லின் நாணி அறுப்படுப்போகக் கோபாக்கிராந்தனாகி ஓடிவந்து தன் விற்கழியாலே பெருமான் தலையில் ஓங்கியடித்தான். பக்தவத்சலராகிய பெருமானார் முடியில் தாக்குண்ட அவ்வடியானது, பிற்காலத்தில் பாண்டியன் ஒருவன் கைப்பிரம்பால் அடியுண்டபோது எப்படி அவ்வடி அகிலலோகங்களுக்கும் பட்டதோ அதுபோலவே, அன்றும் யாவர்மீதும் பட்டது. அரிப்பிரமாதி தேவர்களில் அடிபடாதவரில்லை; மனுமுதலான மனிதர்களிலும் அடிபடாதவரில்லை; ஆதிசேடன் முதலான நாகர்களிலும் அடிபடாதவர் ஒருவருமில்லை; அவ்வடியானது எண்ணில்லாத பிர்மாதி பிபிலிகை பரியந்த முள்ள சமஸ்த ஜீவராசிகளின்மேலும் பட்டது. வேதங்களும் அடியுண்டன; ஆகமங்களும் அடியுண்டன; பஞ்சபூதங்களும் அடியுண்டன; ரூபமில்லாத காலமும் அடியுண்டது; சராசரங்கள்யாவும் அடியுண்டன; இறப்புப் பிறப்பில்லாத பார்வதி மணாளராகிய இறைவர் வேடுருவங்கொண்டு அருச்சுனனால் அடிபட்டபோது அவருடன் அடியுண்ணாத பொருள்கள் ஒன்றுமில்லை. இதனால் ஈசுவரர் எள்ளுக்கு ளெண்ணெய்போல எங்கு நிறைந்து நிற்கும் உண்மையும்; அவர் பக்தர்களுக்கு எளியராதலும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல உணரத்தக்கது. இவ்வாறு நெடுநேரம் யுத்தஞ் செய்தபின் பெருமான் அருச்சுனனை வெற்றிகொண்டு ஆகாயத்தில் விருஷபாரூடராகப் பார்வதிசமேதராய்த் தேவர்களெல்லாம் வணங்கித்துதித்து நிற்கப் பிரசன்னமாயினர். அது கண்டு அருச்சுனன் பேரானந்தத்தையடைந்து பெருமானை:—

"ஆதியே யண்டமுமனைத்துமாயொளிர்
சோதியே கொன்றையந்தொங்கன் மௌலி
வாதியே மரகத வல்லியாளொரு [யாய்
பாதியே பவளமாம் பரமரூபியே.

"பையராவணி மணிப்பவளமேனியாய்
செய்யவாய்மரகதச் செல்விபாகனே
ஐயனே சேவடி யடைந்தவர்க்கெல்லாம்
மெய்யனே யெங்குமாய் விளங்குஞ்சோதியே.

"முக்கணு நிலவெழ முகிழ்த்த மூரலும்
சக்கரவதனமுந் தயங்கு வேணியும்
மைக்கயன் மரகதவல்லி வாழ்வுறு
செக்கர் மெய்வடிவமுஞ் சிறந்துவாழியே."

என்று துதித்து நின்றனன். அப்போது பெருமான் அவனைத் தழுவி அருள்கூர்ந்து உனக்கு யாதுவேண்டுமென்ன, அவனும் பகைவர்களைப் போரில் வெல்லத்தக்க பாசுபதாஸ்திரம் வேண்டுமென்ன அவ்வாறே அப்படைபை அளித்தருளி அநுக்கிரகித்து மறைந்து போயினர்.

### 3. அருச்சுனன் ஊர்வசியின் சாபம் பெற்றது

இவ்வாறு பாசுபதத்தைக் கொடுத்துச் சிவபெருமான் அநுக்கிரகித்துப் போனபின் தேவேந்திரன் அங்கு வந்து அருச்சுனனைப் புகழ்ந்து தன் நகருக்கு வரும்படி வேண்ட அவனும் அதற்கிசைந்தான். அதனால் இந்தரன் அருச்சுனனைத் தேரிலேற்றி வைத்துக் கொண்டு அமராவதிக்குக் கூட்டிச்சென்று

அங்கு தன்னேடொப்ப அரியாசனத்தில் இருக்கச்செய்து முனிவர்கள் ஆசிகூறத் தேவர்கள் துதிக்கத் தும்புரு நாரதர் வீணுகானம் செய்ய ஊர்வசி மேனகை ரம்பை திலோத்தமை நாட்டியம் செய்ய அருச்சுனனுக்கு அநேக சிறப்புகள் செய்தான். அருச்சுனனும் ஆடல்பாடல்களைக் கண்டும் கேட்டும் மனமகிழ்ச்சி கொண்டான். பகற்பொழுதெல்லாம் இவ்வாறு விநோதமாகக் கழிந்தபின் சபைகலைந்து சபையோர் யாவரும் அவரவர் இடங்களுக்குச்செல்ல அருச்சுனனும் தனக்கு நியமிக்கப்பட்ட மண்டபத்தில் போயிருந்தான்.

பகலில் இந்திரசபையிலே நாட்டியமாடிய ஊர்வசி அருச்சுனன் பேரழகைக்கண்டு அவன் மீது காதல்கொண்டு இரவுவந்ததும் தன்னை ஆடையாபரணங்களால் சிறக்க அலங்கரித்துக்கொண்டு அருச்சுனனிடம் சென்ருள். அருச்சுனன் அவளைக்கண்டதும் தன் குலத்தில தோன்றிய ஆயுவின் தாயும் புரூரவாவின் பனைவியும் ஆகலின் அவளை தானும தாய் போலவே பாவித்து எழுந்து சென்று அடிவணங்கி நிற்றலும், அவ்வூர்வசி தன் மனோதம் நிறைவேருததினுல் கொடுங்கோபங்கொண்டு, நான் உன்னைக்காமுற்று வந்திருக்க நீ என் விருப்பிற்கிணங்காமல் இவ்வாறு ஆசாபங்கப் படுத்தினமையால் நீ உன் செளரியமும் அழகும் பெருமையும் யாவும் தேயப்பேடியாகக் கடவாய் என்று கொடிய சாபமிட்டு மீண்டு தன்னிடத்திற்குச் சென்ருள். அருச்சுனன் விளைந்தது கண்டு மிகவும் துக்கித்து வருந்தியிருந்தான்.

பொழுதுவிடிந்ததும் இந்திரன் அருச்சுனன் சபைக்கு வாராமையைக் கண்டு ஒரு தூதனை அனுப்பி அவனை அழைத்து வரும்படி ஆக்ஞாபிக்க அத்தூதனும் சென்று ஆங்கு நடந்த விருத்தாந்தங்களை யறிந்து தெரிவித்தான். அதுகேட்டு இந்திரன் மிகவும் மனவருத்தமடைந்து தேவர்களோடும் ஊர்வசியிடம் சென்று அவளைப் பலவாறு போற்றி மகிழ்ந்துப்பின்பு அவள் அருச்சுனனுக்கிட்ட சாபத்தைமாற்றி அப்பேடி யுருவம் அவன் எப்போது தனக்கு வரவேண்டுமென்று கருதுகின்ருனே அப்போது மாத்திரம் வரக்கடவதென்று மறுசாபம் இடும்படிக் கேட்டுக்கொண்டான். அவளும் அதற்கிணங்கச் சாபத்தை மாற்றினுள்: அதனுல் அருச்சுனன் தன் முன்னுருவத்தைப் பெற்றுச்சிறந்து மனமுவந்தான்.



## SELECTIONS FROM SCHILLER'S POETRY.

## I. THREE WORDS OF STRENGTH.

### மூன்று மந்திரம்.

(நேரிசை வெண்பா.)

THREE WORDS OF STRENGTH.

THERE are three lessons I would write,—
Three words as with a burning pen,
In tracings of eternal light,
Upon the hearts of men.

மாந்தருளத் தென்றும் வயங்குமெரி கோலொன்ருல்
நேர்ந்தரிது தீட்டு நெறிபோலச்—சேர்ந்தொளிரத்
தீட்டுதற்கி யான்கருதுந் தீங்கின்மொழி மூன்றுளவால்
ஊட்டுவன வொண்மதியை யுற்று.

(இ-ள்.) பிரகாசித்து எரிகின்ற எழுது கோலொன்ருல் எழுதினுல் எப்படிப் பளிச்சென்று விளங்குமோ அப்படி விளங்கும்படி மனிதர் இருதயத்தில் நான் எழுதவெண்ணும் குற்றமற்ற நல்ல புத்தியைப் போதிக்கத் தக்க வார்த்தைகள் மூன்றிருக்கின்றன. (க)

Have HOPE. Though clouds environ now,
And gladness hides her face in scorn,
Put thou the shadow from thy brow,—
No night but hath its morn.

ஊக்கமது கொள்கவுனை யோங்குதுயர் சூழுகினும்
தேக்குகளி நிற்கரந்து செல்லுகினும்—மீக்கிளரும்
வாட்டமுகங் கொள்ளற்க மாநிலத்தி னில்விடியா
நீட்டுமிர வில்லையென வெண்.

(இ-ள்.) அம்மூன்று வார்த்தைகளுள் முதலாவது யாதென்னில்—ஊக்கம் கொள்வாயாக; உன்னை மிகுந்த துன்பங்கள் வந்து சூழ்ந்தபோதிலும் மகிழ்ச்சியானது உன் கண்முன் எதிர்ப்படாது தன்னை ஒளித்துக்கொண்டபோதிலும் நீ மனமெலிந்து முகம் வாடாதே. இவ்வுலகில் எவ்வகைப்பட்ட பயங்கரமான இரவுக்கும் முடிவும் விடிவும் உண்டு. அதுபோல உன் துன்பங்களுக்கும் நிவர்த்தி யுண்டாகும். (உ)

Have Faith. Where'er thy bark is driven,—
The calm's disport, the tempest's mirth,—
Know this.—God rules the hosts of heaven,
Th' inhabitants of earth,

ஈசனருள் பற்றிடுகே வெங்கலைந்து கெட்டிடினும்
ஓசைபெறு வாரிதியி லுன்கலன்றான்—தேசிற்
றெரிந்திடுக வானவருந் திண்புவியோர் தாமும்
பொருந்துவரன் னரசிற் புக்கு.

(இ-ள்.) இரண்டாவது உபதேசம் யாதென்னில்—உன் சப்பலானது கடலில் எவ்விடத்தில அலைந்து திரிந்து வருந்தியபோதிலும், அதாவது, நீ எத்தனை துன்பங்களை அடைய வந்தபோதிலும், அதைரியப்படாமல் கடவுள் திருவருளையே துணையாகப் பற்றுக. வானுலகில் உள்ளவர்களும் மண்ணுலகில் உள்ளவர்களும் யாவரும் அக்கடவுளின் அரசாட்சிக்குட்பட்டவர்களாய் அவனால் இரக்ஷிக்கப் படுகிறார்களென்று நீ அறிவாயாக. (ங.)

Have Love. Not love alone for one,—
But man, as man, thy borthers call,
And scatter like the circling sun
Thy charities on all.

யாரிடத்து மன்பு நிறைந்திடுகே யாவரையும்
நேருமொரு சோதரர்போ னெஞ்சுறுக—வாரமுடன்
எவ்வெவர்க்கு நின்கொடையை யின்பாற் புரிந்திடுக
அவ்வெயில்போ லாருலகி லாங்கு.

(இ-ள்.) மூன்றாவது மந்திரம் யாதென்னில்—யாவரிடத்திலும் நிறைந்த அன்பைச் செலுத்துவாயாக. எல்லோரையும் உன்னுடன் பிறந்த சகோதரர்போலப் பாவிப்பாயாக. வெயிலானது பட்சபாதமில்லாமல் எங்கும் ஒரே தன்மையாய் எறித்தல்போல் எல்லாவர்க்கும் அன்போடு உன்னாலியன்றதைக் கொடுத்து உதவி செய்வாயாக. (ச)

Thus grave these lessons on thy soul,—
Hope, Faith, and Love, and thou shalt find
Strength, when life's surges rudest roll,
Light, when thou else wert blind.
—*Schiller*.

ஊக்கமருள் பற்றிடுதல் உற்றிடுமன் பென்னிவற்றை
நீக்கமற நெஞ்சிற் பொறித்திடுக—ஆக்கை
தளர்ந்திடும்போழ் தார்வலியைத் தந்திடுமா ருள்ளில்
விளைந்தவிரு ணீக்குமொளி மிக்கு.

(இ-ள்.) ஊக்கம்; திருவருளைப்பற்றுதல், அன்பு என்னும் இந்த மூன்று வார்த்தைகளையும் உன்னுடைய நெஞ்சில் பதியும்படி எழுதிக்கொள்வாயாக. இவை உனக்கு மெய்த்தளர்ச்சி வந்தபோது பலத்தைக் கொடுக்கும்; மனத்தில் துயரமாகிய இருள் நிரம்பிய காலத்தில் ஒளியைக் கொடுக்கும். (ரு)

## II. SPACE.

## இடம்.

(பஃறொடை வெண்பா.)

முத்திறத்த தாகு மிடனென்ப மொய்நீளம்
தத்திடுமே தாவி முடிவில் பரப்பெல்லாம்
எத்திசையுஞ் சென்றளக்கு மெல்லையிலாதோரகலம்
மற்றுளதோ ராழ மருவியே சென்றண்டப்
பித்தியையும் பேதித்துக் கீழே பிறங்கிடுமால்
எத்தகையான் சொல்வே னிதை.

(இ-ள்.) இடமானது மூன்று வகையாகுமென்பார்கள். ஒன்று, நீளம், இது; முடிவில்லாத பரப்பெல்லாம் சென்று தாவும்; இரண்டு, அகலம்; இஃது எல்லையில்லாமல் எத்திசையையும் சென்று அளக்கும்; மூன்று, ஆழம்; இது அண்ட பித்தியையும் பிளந்து அப்புறஞ் சென்று அதற்கடியில் வியாபிக்கும். இவற்றின் பெருமையை நான் எவ்வாறு எடுத்துச் சொல்லுவேன்? (எஸ். முத்துஐயர், பி. ஏ.)

## "HAIL, MOTHER! I TAKE REFUGE IN THEE!"

"Here in Nature's splendid Hall, (the Magician's *Arcanam* and the Mystic's *Astral Light*)—the "audience-chamber" where Nature with maidenly modesty surrounded by Her heavenly hosts, grants ceremonial interview to those intrepid souls that have dared death and staked their very life in pursuit of Her, the undaunted wooer that will yet win Her heart and love, and claim her hand, is allowed to read the fates of all that have dared to venture further on and failed. A rueful tale of tears, vain strivings, great falls, an immense array of skeletons shorn clean of all their coverings, ghastly spectres of high hopes cherished with great powers but shattered to pieces by faint heart or faltering faith at a moment of sudden peril or overwhelming misfortune,—these greet the advancing Initiate's eye and he is allowed plenty of time to muse on them or loiter about. Woe betide the laggard pilgrim who is attracted by the mirths and make-believe joys of the swarming host of heavens who have great powers to make or mar all that is beneath the sway of that stately Hall, but who are warned like the well disciplined retainers they are, of a noble regnant Queen, not to intrude themselves with their attentions on any guest against his will. They are free to make the most of him who courts them or even flirts with them; and their power to charm and chain the unsteady in heart is indescribable; but the ardent virtuous wooer and true lover who cares for nought but the hand of the regnant Queen, and that for her own sake, not for the wealth or pomp of her court, has nothing to fear; and these hosts show the utmost deference to his will and their assiduous endeavours to please him form a remarkable feature of Life at this stage."—*Gleanings on the Way.*

"The truly poetic account of the writing in the inmost heaven which as it consists of inflexions according to the form of heaven can be read without instruction. In the transmission of heavenly waters, every hose fits every hydrant. Nature avenges herself speedily on the hard pedantry that would chain her waves. She is no literalist. Every thing must be taken genially and we must be at the top of our condition to understand anything rightly."—*Emerson.*

## A Prodigal's Repentant Supplication to his Mother.

"O mighty Mother - in silence receive thy child.
Weary, fainting - having travelled far and forsaken thee, having undertaken burdens too great to be borne -
Atlas of griefs and sorrows, well nigh borne down beneath the load -
Thy foolish child, wandering afar from thee, yet led by what divine madness? -
O mighty Mother receive.

Never again to stray.
Having circled the globe, having completed the many - thousand - year - long round which thou secretly appointedest for me -
Through what mystifications, troubles, delays, what returning on old tracks, what torments and inward suffering (thou knowest best) -
What entanglements and illusions -
O mighty Mother receive!

Outcast and friendless (for that was my necessary doom) and homeless on the verge of creation, I first knew myself - sorrow was the wall which divided me from thee.
I beheld thee afar and knew thee not; I was a prisoner and guessed not that I was in prison.

But now at thy feet - thanks, thanks!
Pouring out my soul in gratitude to thee - thy child so foolish, to Thee dear mother -
Whilst thou one by one disentanglest the loaded heavy chains which I have dragged so far -
(One by one, for not all at once will they come off, and fast and eating into my flesh are they riveted) -
At thy feet I sit and sing, knowing thou hast sworn to give me Freedom.

Ages shall my song last - for not all at once can I disburden myself;
Ages will I sing for joy - warbling in thy presence - as the birds to the risen sun;
Then at last arising Thou mother shalt take me by the hand - we will leave the earth, and thou shalt learn me to fly through heaven.

—*Edward Carpenter* - "Towards Democracy"

உ

கணேசாயநம:

## தஞ்சமென்றடைந்தேன் தாயே வந்தனம்!

(அத்துவித இலக்கணம்)

"நெக்கு நெக்குள் ளுருகியுருகி நின் றமிருந் துங்கிடந்து மெழுந்து
* நக்குமழுதுந்தொழுதும் வாழ்த்திநானாவிதத்தாற் கூத்துநவிற்றிச்
† செக்கர்போலுந் திருமேனிதிகழ நோக்கிச் சிலிர் சிலிர்த்துப்
புக்குநிற்பதென் றுகொல்லோவென்பொல்லாமணியைப்புணர்ந்தே."

"ஆற்றுகில்லேனடியேனரசே யவனிலதத்தைம்புலனாய
சேற்றிலழுந்தாச்சிந்தைசெய்து சிவனெம்பெருமானென்றேத்தி
யூற்றுமணற்போனெக்குநெக்குள்ளேயுருகி யோலமிட்டுப்
போற்றிநிற்பதென் றுகொல்லோவென்பொல்லாமணியைப்புணர்ந்தே."—

திருவாசகம்.

---

i

தாயே,மாதேவி! தஞ்சமோதஞ்சம்! அஞ்சேலென்றாண் டேற்றருணின்சேயை!
நாயேனின்பொன் னடிவிட்டோடியே அலைந்துதிரிந்து நலிந்துமெலிந்தேன்!
வாயேனெற்கு ஆ! வெறியேனின்சேய்வீம்பதுபூண்டு பாம்பதுபோல நெளிந்தேன்புவிமிசை!
தாயேநொந்தேன்! தாங்கேனினிப்பாரம்! தூக்கொணாத்துயர்ச்சுமை தூக்கிநானைந்தேன்!
(CHORUS / கணகாதம்) தஞ்சந்தஞ்சந்தாயேகாத்தருள்அஞ்சலென்றுன்சேயை அரவணைத்தே!

ii

வர்மம்வேண்டாம் தாயேகாத்தருள் நின்னடிபிரியா தென்னையணைத்தே!
கர்மவினைசூழக் காசினிமுழுவதுங் கெட்டலைந்துலைந்தது போதும்போதும்!
வர்மந்தானெத்தனை! வாதுகளெத்தனை! சூதுகணிறைந்த சனைவழியெத்தனை!
தர்மந்தலைகீழாத் தவறிவிழுந்திடக் கர்மவலைப்பட்டுக் கருத்தழிந்தயர்ந்தனன்!
(CHORUS / கணகாதம்) உள்ளமுணர்ந்தேயின்னருள்சாதித்துக் காத்தருள்தாயே நின்சேயை!

---

* நகைத்துமழுதும்; நவில்=to learn, to imitate, to speak. கூத்துநவிற்றி-கூத்தாடி.
† செக்கர்=செம்மை; செவ்வானம்போலுந்திருமேனி-சிவன்திருமேனி. Comp. 'அந்திபோலுருவானும்

iii

யாரொடுநோவே னார்க்கெடுத்துரைப்பனுன் பட்டதொர்பாடெலாம் பார்த்திருந்தாய்!
யாரொடுசேர்த்தியா னாரெனக்குற்றார்! உனையலாதெனக்கொரு கதிதானில்லைகண்டாய்!
சீரொடுபொலிவாய்ச் செம்மைநலந்தரும் நினையலாதொருவரைத் தொழுதியான் துதிப்பே [னேசொல்லாய்!
வேரொடுமும்மலக் களையறுத்தாண்டிடு மன்னையேநின்னடி தஞ்சமென்றடைந்தேனே!
(CHORUS கணநாதம்) உள்ளமறிந்துன் திருவடிசூட்டிக் காத்தருள்தாயே நின்சேயை!

iv

நின்னடிதந்தனை யென்கலிதீர்த்தனை நினையன்றியானென்ப தில்லாதியற்றினை
பொன்னடிநீழலிற் பிணைத்தெனையிருத்திக் கணத்தினிற்பெந்தக் கயிற்றினையறுத்தனை
நின்னடிசேர்ந்தயான் பொன்னடிதொழுது முன்னைமுடிச்சுக ளவிழ்தொறும்பாடுவன்
என்னடிசேரா துன்னடிதந்தது மென்வினைதீர்ந்தது! நின்னடிதொழுவனை!
(CHORUS கணநாதம்) எல்லாவுயிர்களினுள்ளத்துறையும்உனையறிந்துரைசெயு மாற்றுணர்த்தே!

v

போற்றுவனின்னடி புகழுவனின்பதம் வேற்றுமைதோற்றம் வேறில்லையெனக்கினி!
ஊற்றுநீர்சுரக்குமா றுள்ளெழுந்தூறியூறிக் கூற்றுவனொழிந்திடக் குதூஹலம்விளைத்தனை!
போற்றுவனுன்னையான் போதப்பெருக்கினாற் புள்ளினநள்ளிருடீரப் பாடுமாபோல்!
ஆற்றுநீரோடியோடி யலைகடல்சேர்ந்துகூடிக் காற்றதுசலனந்தீறக் கரைதிரையற்றவாறே!
(CHORUS கணநாதம்) நின்னருள்போற்றியேற்றி நின்மலன்றானேயாகிநிறைவெளியடைவனின்சேய்!

vi

அருளினி லிருந்திருந் தருள்முதிர்ந் துதிர்ந்தபோது
மருளினைப் போக்கியென்றன் மயலெலாந் தீர்த்தவென்தாய்!
தெருளினில் வளர்ந்தவுன்றன் தெள்ளமுதுண்டநற்சேய்
இருளெலாந் தாண்டியுன்னோ டருள்வெளிக்கப்பாலுள்ள—
(CHORUS கணநாதம்) அத்தனோடைக்கியமாகச் செய்வதுன் கடமையன்றோ!
தாயே வந்தனம்! தயாநிதே வந்தனம்! சோதியேவந்தனம், சொல்மதியே!

(ஓம் தத்ஸத்.)

# "MERRY WIVES" OF MODERN IND.

## [AFTER SHAKESPEARE'S "MERRY WIVES OF WINDSOR."]

*(By S. Ramaswami Aiyar, B.A.)*

## கற்பைக் காப்பாற்றிய பெண்கள்.

### இந்நாடகத்தின் வேஷதாரிகள்

ராயபகதூர் பீமவர்மன்:
குணசுந்தரி, பானுமதி, } இவர்கள் பேரில் காமங்கொண்டவன்.
காமசுந்திரன்... மோகனமாலையின் பேரில் காதல் கொண்டவன்.
விக்ரமவீரன்.
கேசவதத்தன்... விக்ரமவீரன், மருமகன்.
வீரசேனன், உக்ரசேனன், } இரண்டு சினேகிதர்கள்.
வாசலன்... வீரசேனனுடைய மகன்.
ப்ரதாபன்... கேசவதத்தனுடைய சினேகிதன். பள்ளிக்கூடத்து வாத்தியார்.
பாரக்ரமன்... வைத்தியர்.
சகுணன்... ஓர் பெரிய ஹோடல்காரன்.
கருப்பன், முத்தன், } உக்ரசேனன் ஆள்கள்.
மார்த்தாண்டன், முனியன், வெறியன், வக்ரன், } பீமவர்மனுடைய ஆள்கள்.
சசிலன்... கேசவதத்தனுடைய வேலைக்காரன்.
வீரன்... பாரக்ரமனுடையவேலைக்காரன்.
பானுமதி... உக்ரசேனன் பெண்சாதி.
குணசுந்தரி... வீரசேனன் பெண்சாதி.
மோகனமாலை... வீரசேனன்பெண்; காமசுந்திரன் பேரில் காதல்கொண்டவள்.]
பத்மினி... பாரக்ரமன் சமையற்காரி.

5-வது காட்சி.

(218-வது பக்கத் தொடர்ச்சி.)

உக்ரசேனன் :—இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது. மோகனத்தை யதார்த்தத்தில் கலியாணம் செய்தவன் இவன் என்று தெரியவில்லையே.

குணசுந்தரி :—இது யாரோ, எங்கள் இருவரையும் ஏமாற்ற செய்தவேலே. என் மோகனத்துக்கு பச்சையுடுப்பு போட்டிருந்ததையும் எடுத்து வேறு யாருக்கோ போட்டிருக்கிறார்கள்.

வீரசேனன் :—இதோ காமசுந்திரன் மோகனமாலையோடு வருகிறானே. அடபாவி. இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது.

(காமசுந்திரன் மோகனமாலை வருகிறார்கள்.)

என்ன காமசுந்திரா, இதெல்லாம் உன் வேலையல்லவா இருக்கட்டும்.

மோகனம் :—அப்பா அம்மா நீங்கள் என்னை மன்னிக்கவேண்டும்.

வீரசேனன் :—மோகனம் நான் உனக்கு சொல்லியபடி நீ என் கேசவதந்தனோடு போகவில்லை.

குணசுந்தரி :—மோகனம் நான் உனக்கு சொல்லியபடி நீ என் பாராக்ரமனோடு போகவில்லை.

காமசுந்திரன் :—அவள் ஒருத்தி இருவர்களோடு எப்படி போகமுடியும். இருவர்களும் வேண்டாமென்று, பொல்லாப்பில்லாமல் என்னிடம் வந்துவிட்டாள். அவளுக்கு காரணம் ஒன்றும் தெரியாது எல்லாம் நான் சொல்லுகிறேன் கேளுங்கள். நீங்கள் இருவரும் அவளை அவளுக்கு கொஞ்சம் கூட பிரியம் இல்லாத இடத்தில் கலியாணம் செய்ய ஏற்பாடு செய்திருந்தீர்கள். யதார்த்தத்தில் உங்களுங்கு தெரியாமல் வெகுநாளைக்கு முன்னமேயே நாங்கள் ஒருவருக்கொருவர் கலியாணம் செய்துகொள்வதாக சத்யம் செய்துகொண்டோம். அதனல்தான் நான் நீங்கள் வைதபோதிலும் என்னை அவமானம் செய்தபோதிலும் அதுகளை கவனிக்காமல் எப்படியாவது உங்கள் அனுமதியை வாங்கி பகிரங்கமாக கலியாணம் செய்ய என்னல் கூடியமட்டும் பிரயத்தினம் செய்தேன். ஆனல் நீங்கள் இருவரும் ஒரேபிடிவாதமாய் மறுதளித்துவிட்டீர்கள். பிறகு உங்கள் எண்ணங்கள் வேறு விதமாய் இருப்பதையும் யோஜித்து, நீங்கள் நேற்று யோஜித்து வைத்திருந்த ஏற்பாடுகளுக்கும் விரோதம்செய்து எப்படியாவது கலியாணம் செய்துவிட வேணுமென்று நானும் நேற்றுமுதல் யோஜனைகள் செய்து வைத்தேன். இனி எங்கள் கலியாணத்தை தடுக்க உங்களால் முடியாது. நீங்கள் சொன்ன அடையாளங்களை அந்த முட்டாள்கள் அறிய முடியவில்லை என்பதை நான் தெரிந்துகொண்டு பதமினியிடம் சொல்லி ஒரு பையனுக்கு வெள்ளையுடுப்பு போடச்சொன்னேன். அவனை கேசவதத்தன் நம்பும் பொருட்டு அவன் வரும்போதே மெதுவாக போ என்று சொல்லச்சொன்னேன். இன்னொரு பையனுக்கு பச்சை யுடுப்புபோட்டு, அவனை ஜாடைகள் செய்யச்சொல்லி, அவனை பச்சை உடுப்புக்காரனேடு போகும்படி சொல்லிவைத்தேன். வெள்ளை உடுப்பு பையனை வெள்ளை உடுப்பு கேசவதத்தனேடு போகச்சொன்னேன். கடைசியாக மோகனத்துக்கு நான் வாங்கிக்கொடுத்த சிவப்பு பட்டு உடுப்பை பத்மினியைக் கொண்டுபோடச் சொன்னேன். நானும் சிவப்பு உடுப்பு போட்டு வருவதாக மோகனத்துக்கு சொல்லியனுப்பினேன். இப்படியாக உங்கள் எல்லோரையும் நான் ஏமாற்றி விட்டேன். உங்கள் மோகனம் ஒரு தப்பிதமும் செய்யவில்லை. அவள் செய்த தப்பிதம் அவளுக்கு நன்மையான தப்பிதமே யல்லாமல் வேறல்ல. கொஞ்சம் நீங்கள் தாயார் தகப்பனர் என்ற மரியாதையை பார்த்து அவளுக்கு மனமில்லாமல் நீங்கள் கட்டாயம் செய்கிற இடத்தில் கலியாணம் செய்துகொண்டு அவள் என்றைக்கும் கஷ்டப் படுவதைவிட, இப்போதே கொஞ்சம் உங்கள் சொல்லைக் கேளாத குற்றத்தைச் செய்தாவது, அவள் எப்போதும் சுகமாக இருக்கும் நன்மையைத் தேடிக்கொண்டது அவளுக்கு நல்லதல்லவா. இதை தப்பிதம் என்றாவது, மோசம் என்றாவது சொல்லக்கூடாது. அவள் நல்ல காரியத்தைச் செய்தாள்.

வீரசேனன் :—காமசுந்திரா, எங்களிடம் சொல்லாமல் இப்படி நீ செய்யலாமா.

குணசுந்தரி —என் பெண்ணை ஏமாற்றி கூட்டிப் போய் கலியாணம் செய்தது உனக்கு தர்மமா.

காமசுந்திரன் :—நான் என்ன செய்வேன். அவளுக்கு என்பேரில் பிரியம் விழுந்து விட்டதே. அவளை நான் ஏதாவது கட்டாயம் செய்திருந்தால் அவளை சொல்லச் சொல்லுக்கள்.

மோகனமாலை :—அம்மா, அப்பா நீங்கள் எனக்காக தயவுசெய்து அவர் பேரில் கோபப்படாமல் அவரையும் என்னையும் மன்னித்து எங்களுக்கு ஆசீர்வாதம் செய்யவேண்டும்.

உக்ரசேனன் :—நீங்கள் ஆச்சரியப்பட்டும் கோபப்பட்டும் இனி என்னசெய்கிறது. நடந்தது நடந்துவிட்டது. இனிமேல் நாம் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. கலியாண விஷயத்திலும் ஆசை விஷயத்திலும், புத்தியை சுவாமிதான் செலுத்துகிறார். அவர் இஷ்டம்போல தான் நடக்கும். பூமிகள் சொத்துக்கள், இதுகளெல்லாம் பணத்திற்காக விற்கப்படுகிறது. பெண்டாட்டிகள் மட்டும் பகவானல்தான் விற்கப்படுகிறார்கள். அதை உங்களால் தடுக்க முடியாது. தடுப்பதும் பகவான் எண்ணத்திற்கு விரோதம். ஆதலால் தடுத்தாலும் பாபம் சம்பவிக்கும்.

பீமவர்மன் :—நீங்களெல்லாம் என் எண்ணத்தை கெடுக்க பிரயத்தினப் பட்டீர்கள். நான்

செய்தது பிசகு தான். இருந்தபோதிலும், சுவாமி எனக்கு கொஞ்சம் திருப்தி செய்ய, உங்கள் எண்ணத்தையும் கெடுத்து உங்களையும் மாற்றி விட்டார்.

வீரசேனன்:—காமசுந்திரா, பகவான் உனக்கு மேல்மேலும் சந்தோஷத்தைக் கொடுக்கட்டும். நடந்தபோன காரியத்தை அனுசரிக்க வேண்டுமேயல்லது எதிர்ப்பதில் பிரயோஜனம் இல்லை. இனி மேலாவது என் மோகனத்தின் சகவாசத்தால், உனக்கு செலவை மட்டுப்படுத்தும் குணமும் பிடிபட்டு நீயும் சுகமாக குடித்தனம் செய்து மகாராஜனயிருக்க வேண்டும். அவ்வளவுதான் நான் பகவானை பிரார்த்தித்துக் கொள்வது. இனி மோகனத்துக்காக வைத்திருக்கும் சொத்துகள் எல்லாம் உன்னுடையது தான்.

குணசுந்தரி:—இனிமேல் நாம் யோஜனை செய்வதில் பிரயோஜனம் ஒன்றுமில்லை. காமசுந்திரா நீ மகாராஜனய்என் மோகனத்துடன் நெடுங்காலம்வாழ்ந்துசுகமாக இருக்கவேண்டியது. நல்லது எல்லோரும் வீட்டுக்குப் போய் இந்த சுபமுகூர்த்தத்தைக் கொண்டாடுவோம் வாருங்கள். பீமவர்மரே நீரும் வாரும், எல்லோரும் சாப்பிட்டுவிட்டு இந்த வேடிக்கைகளைச் சொல்லி சந்தோஷிப்போம்.

உக்ரசேனன்:—நல்லது அப்படியே செய்வோம். பீமவர்மா உன்வாய்க்கு சர்க்கரை போடவேண்டும். நீ கமலாகாருக்கு சொன்ன வாக்குதத்தத்தை நிறைவேற்றிவிட்டாய், கமலாகரர் இன்றுராத்திரி கட்டாயம் உக்ரசேனன் பெண்சாதியுடன் படுத்துக்கொள்ளப் போகிறார் என்று சொன்னாய், அவரும் அப்படியே கட்டாயம் இன்றைக்கு உக்ரசேனன் பெண்சாதியோடு படுத்துக்கொள்ளப் போகிறார். பிறர் பெண்சாதியை கூட்டித்தருவதாக வாக்களித்து யார் இப்படி சொல்தவறாமல் உன்னைப்போல் நடத்தக்கூடும். எல்லோரும் போகலாம் வாருங்கள். ஓகோ மறந்து விட்டேனே! குணசுந்தரி, மோகனம் கலியாணத்திற்காக நீங்கள் ஒரு மங்களம் பாடவேண்டாமா.

குணசுந்தரி:—அவசியம் பாடவேண்டும். நல்லது பானுமதியை பாடச்சொல்வோம்.

உக்ரசேனன்:—பெண்ணே பானுமதி; மோகனத்தின் கலியாணம் இவ்வளவு வேடிக்கையாக நடந்ததைப்பற்றி ஒருபாட்டு மங்களமாகப்பாடு. கேழ்ப்போம். அவள் பெயர் மோகனமாயிருப்பதால்; அந்தப்பாட்டின் ராகமும் மோகனராகமாக இருக்கட்டும்.

பானுமதி:—நல்லது அப்படியே பாடுகிறேன். (பாடுகிறாள்.)

மோகனராகம்—ரூபகதாளம்.

மோகனத்தைக்கைகொண்டானே-காமசுந்திரன்.
கலியாணம்செய்துகொண்டானே-

மங்களம் மங்களம் ஜயமங்களம் எங்கள் காம
சுந்திரன் மோகனத்துக்கும் மங்களம் (மோகன)

வீரசேனன் னெண்ணம் போச்சே, தெய்வத்தின் செயலுமிப்போ விளங்கலாச்சே-கேசவதத்தனுக்கும் பெண்பையனாகிப் போச்சே, குணசுந்தரி கர்வம் வீணாகிப் போச்சே (மோகன)

காமசுந்திரனுக்கு மோகனங் கிடைத்ததேன், வைத்யருக்குப் பெண்போல பையன் கிடைத்ததேன்-பெற்றோர் தன்பெண்ணுக்குநல்வரன் பாராததால், தெய்வம் அவர்களையே அவமானம் செய்ததே (மோகன)

மோகனமும் நம்ம காமசுந்திரனும் சுகமாகவாழட்டும் தெய்வனுகூலத்தால், மங்களம் மங்களம் ஜெயமங்களம் எங்கள் - காமசுந்திரன் மோகனத்துக்கும் மங்களம் (மோகன)

(பீமவர்மனை தவிர எல்லோரும்போகிறார்கள்.)

பீமவர்மன்:—யோஜித்துப் பார்க்குமளவில், எனக்கு நடந்திருக்கிறமரியாதையெல்லாம்: எனக்குநன்றாய் வேண்டியதுதான். நான் முதல் முதல் இப்படிப்பட்ட கற்புள்ள ஸ்திரீகளுக்கு கடிதம் எழுதினதேபிசகல்லவா. என் புத்தி இப்படியெல்லாம் மோசம்போய்விட்டது. நல்ல மார்க்கத்தில் இருப்பவர்களுக்கு ஒருபோதும் குறைவு வரமாட்டாது. நான் இந்த கெட்ட எண்ணம் எண்ணினதற்கு பகவான் என்னைத் தகுந்தபடி தண்டித்து விட்டார். கற்பின் மகிமையே மகிமை. கற்புள்ள ஸத்ரீகளிடத்தில் துஷ்டர்களுடைய காரியம் ஒருபோதும் பலிக்காது. இனிமேல் நான் ஏன் கெட்ட எண்ணங்களை விட்டுவிட்டேன். பிறர் பெண்சாதிகள் பேரில் ஆசை வைப்பவர்களுக்கெல்லாம் என் கதிதான் கிடைக்கும். நல்லவேளை நான் பட்ட கஷ்டங்களுக்கு இனிமேல் பிறர் பெண்சாதிகளை தாய்போல நினைக்க வேண்டும் என்கிற நீதியை நான் இப்போது நன்றாய் கற்றுக்கொண்டேன். இனி எல்லோருக்கும் இந்த நீதியைத்தான் எடுத்துச் சொல்லி என்போல குணமுள்ளவர்களையும் நான் நல்ல வழிக்கு கொண்டுவர பிரயத்தினம் செய்யப்போகிறேன். இனி என்னுயிர் போகும் வரையில், எல்லோருக்கும் இந்நீதியை எடுத்துரைப்பது தான் எனக்கு வேலை. ஓகோ அவர்களெல்லோரும் நமக்காக காத்திருப்பார்கள். இனி நான் இங்கே தாமதிக்கலாகாது. போய்வருகிறேன்.

(போகிறான்.)

கற்பைக் காப்பாற்றிய பெண்கள்
முற்றிற்று.

## புஸ்தகக்குறிப்புகள்.

**ஸ்ரீருக்மணி பரிணயம்** —இது காலக்ஷேபமென்று வழங்கும் ஹரி கதைகளில் பாகவதர்கள் உபயோகிக்கும்படி மஸ்ரீ ப. கி. கல்யாணராம சாஸ்திரிகளால் கீர்த்தனரூபமாயியற்றியது. இது ஸாகித்ய ஸங்கீத வித்தைகளில் தேர்ந்தவர் சரி பார்க்கவேண்டிய புஸ்தகம். இதை இயற்றியவர் "இவ்விரண்டு வித்தைகளின் நாமதேயமறியாதவனும் தமிழின் தன்மையும் ஸம்ஸ்கிருதத்தின் ஸ்வரூபமும் இன்னதென றுணராதவனுமான சிற்றறிவுடைய யான் குருஹரவமொன்றினுல் மாத்திரம் வலுப்பெற்று பாவனக்தாவஸ்துக்களால் பாவிதனுக விரும்பி யிச்சரித்திர கீதத்தை வெளியிடலானேன்" என்கிறார். இவ்வளவு அடக்கத்தோடுள்ளவர் குருஹரவ மேட்லீடால் பாடியவொன்றைக்குறை நிறையளந்து கூறுதலாமோ? ஆயினும் இது அவருடைய பிரிய சகோதரிகளான "சீதாலக்ஷ்மி மீனுக்ஷி, திரிபுரசுந்தரி இவர்களின்" ஞாபகார்த்தம் இயற்றப்பட்டிருப்பதால் பெண்பாலர் இதை வாங்கி வாசிப்பதில் பிரியமுள்ளவர்களா யிருப்பார்களென்று தோற்றுகிறது. இதில் ருக்மணி ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்குக் கடிதமெழுதும் பாகம் ரஸமானதாகையால் அவள் எழுதிய கடிதத்தைக் கீழே யெடுத்துப் பிரசுரிக்கிறோம்.

நின்னேடபாசி நாமுதலு என்ற
ஜாவளியின் வர்ணமெட்டு.

சுந்தரரூப! சிந்தித்துமைக் கண்கள்
சோர்ந்து நித்திரையின்றி வாடினவே.

அந்தரங்கந்தன்னில் ஆசைமீறியே நான்
வலுவில் பத்திரம் வரையலாயினேன்-காந்தா.
காலில் பணிந்தேன்; கதிவேறில்லை எனக்குக்
காருண்யநிதே! வந்தென்னைக் காருமே-
(சுந்த)

காலன் சிசுபாலன் என்னைக் கோருகின்றானும்,
நாளை கல்யாணமாம், என்செய்குவேன்? நாதா!
பாலனம் செய்யப் பரிவாய் வந்தென்குறை
தீராவிடி லுயிர் போமையனே- (சுந்த.)

குல வழக்கப்படி குலதெய்வத்தைத் தொழக்
குறிப்பாய்ப்போவேனின்னுயிர் நாயகா! மீண்டு
வலம் வரும் காலை மிருதாமானவேளை
மன்னு! எடுத்தேனை த்வாரகை போகவே-
(சுந்த.)

நீனே, அனுதை, உற்றார் பெற்றோரெல்லாம்
தாமே எனக்குத் தயாசாகரா! - நாதர்!
சோதனை வேண்டாம், சமயமிதுவே,
தாஸன் கல்யாணராமன் துதி தெய்வமே!-
(சுந்த.)

---

"**பாலர்க்கினியகீதம்**":—காவேரிப்பாக்கம் ஸ்ரீராம ஐயங்கார் அவர்கள் இப்பெயர்கொண்ட சிறு புஸ்தகமொன்று நமக்கனுப்பியிருக்கிறார் இதிலடங்கிய ஸ்தோத்திரப் பாடல்கள், கொம்மி, கோலாட்டப் பாடல்கள், மார்ச்சிங் பாடல்கள், வாழ்த்துப் பாடல் முதலிய கீதங்கள், இதை இயற்றிய கா. ரா. சடகோபாசாரியரால் பிள்ளைகளுக்குக் கற்பிக்கப் பட்டிருப்பதால், இவை சிறுபிள்ளைகள் பயில்வதற் கேலாதவையென்று சொல்வதற்கில்லை. காவேரிப்பாக்கம் ஹிந்துபாடசாலை மானேஜரும்பெரியகாஞ்சிபுரம் ஹிந்துபால வித்தியாபாடசாலையின் மானேஜரும் காஞ்சிபுரம் முனிசிபல் ஸ்கூல் ட்ரில் உபாத்தியாயரும் கேட்டுக்கொண்டதின்மேல் இது இயற்றப் பட்டதால், கல்விபோதிப்போர் குறையெனக்கண்டதொன்றை நிறைசெய்யவே இது வெளிவந்ததென்று விளங்குகிறது. இது அந்நிய பாஷையிலுள்ள கீதங்களை யனுசரித்து அவற்றின்மொழி பெயர்ப்பாக வின்றி இந்துக்கள் எண்ணங்களையும்அப்பியாசங்களையுமேயனுசரித்து சரியாக இராகம்-தாளமமைய இயற்றப் பட்டிருக்கிறது. இதிலிருந்து சாஸ்வதி ஸ்தோத்திரம், அடங்கிய பாடல்கள் ஒன்று எடுத்து இதில் அச்சிடப் பட்டிருப்பதால் இச்சிறு புஸ்தகத்திலடங்கிய பா ல்களின் குணத்தையும் நயத்தையும் வாசிப்போர் நன்கறிந்து கொள்ளலாம். குழந்தைகளுக்கு தெய்வபக்தி இன்றியமையாச் செல்வமாதலால் அது அவர்கள் மனதிற் பதிய இளம்பருவத்திலே பழக்குவோர் அவர்களுக்கு எல்லாச் செல்வமும் சிறப்பும் பெற அமைத்தவர்களாவார்கள். இதை பிரதமபோதகாசிரியர்கள் நன்குணர்ந்து அனுஷ்டிக்கத் துணிந்த தன்றி இவ்வளவு நயம்படுமொழியில் அதை அவர்களில் ஒருவரியற்றி வெளிப் படுத்தியது நமக்கு மிகவும் சந்தோஷத்தைக் கொடுக்கிறது. எல்லாப் பாடசாலைகளிலும் இதையுபயோகித்து வருவது மிகவும் நலம் பயப்பதாயிருக்கும். இவ்வித பாடல்கள் பிழையறச் செய்து பிரசித்தம் செய்வோர் நமது சிறுவர்களுக்குப் பேருதவி செய்பவர்களாயிருத்தலின் அவர்கள் நன்முயற்சியை புத்திமான்களும விவேகிகளும் நன்கு மதித்து அவர்களுக்குக் கிளர்ச்சியுண்டாகவுற்சாகமூட்டக்கடமைப் பட்டவர்களாகவிருக்கிறார்கள்.

---

"**துர்க்கேசநந்தினி.**"—பெங்காளத்தில் மிகவும் கீர்த்திபெற்ற பங்கிம்சந்திர சட்டோபாத்தியாயரால் இயற்றப்பட்ட அனேகம் விநோதக்கதைகளில் ஒன்றான இச்சரித்திரத்தை, க. தெ. வெங்கடவரதாசாரியர் அவர்கள், தமிழில் மொழிபெயர்த்தெழுதிப் பிரசுரித்திருக்கிறார். இது வாசிக்க மிகவும் ரசமாயுள்ள ஒரு இனியகதை. இதைத் தமிழிலியற்றியவருக்கு வங்காளபாஷை தெரியாதாகையில், சாருசந்தரமுகர்ஜி ஆங்கிலேய பாஷையில் மொழிபெயர்த்ததைக்கொண்டு அதனின்றும் மொழிபெயர்த்துப் பிரசுரித்துளார். துர்க்கேசநந்தினி யென்பதற்கு "பிடிக்கமுடியாத கோட்டைக்கு அதிபதியின் மகள்" என்பது பதப்பொருள். இக்கதையின் சாரத்தை நேரில் படித்துணரவேண்டும். ஜயத்சிங்கர் என்னும் இராஜகுமாரன் திலோத்தமையை மணம்புரிந்தபொழுது அவர் சிறையிருந்த நவாப்பின் புத்திரியாகிய அயேஷா அவரிடத்துள்ளன்பு பாராட்டியவளாயினும் தன்னயமொழித்து, அன்பவசப்பட்டும், அதையடக்கி யொழுகிக்கொண்ட திறமை அன்பின் குணத்தை யழகாய் விளக்குகிறது. இதைவாசிக்க விரும்புவோர் ஸ்ரீனிவாசவரதாசாரி கம்பெனியாரிடம விலைக்குப் பெற்றுக் கொள்ளலாம். இதன் விலை ரூபா 1.

——:(*):——